# ரெக்ஸோனா

## சரும அழகை உண்டாக்குகிறது

### ...சரும சுகத்தை பாதுகாப்பதன் மூலம்






ஆம், ஏனென்றால் ரெக்ஸோனா சுறுசுறுப்பாய் உற்சாகமூட்டிச் சரும சுகத்தைப் பாதுகாக்கிறது—சரும சுகத்திற்குச் சரும சௌந்தர்யமே உண்மையான அடிப்படை—சரும அழகைக் கொடுக்கும் பாத்தியதை தனக்கேயுண்டென்று ரெக்ஸோனா உண்மையாகச் சொல்லக்கூடும்.

இதை எப்படி ரெக்ஸோனா செய்கிறது? சரும வியாதியைப் போக்கும் கிருமி நாசினியாகிய *கேடில் என்னும் மருந்து அதிற் சேர்த்திருப்பதால் அது அவ்வாறு செய்கிறது. சரும உபத்திரவங்களும், சரும மாசுமறுக்களும் அடிக்கடி அதிகமாய் உண்டாகும் இடங்களுக்கும்—சருமத்தின் ஒவ்வொரு அடிப்பாகத்திற்கும்—சுகமளித்துச் சுத்தம்செய்கிற கேடில் என்னும் மருந்தை ரெக்ஸோனாவின் விரைவில் உண்டாகும் நுரை கொண்டுபோய்ச் சேர்க்கும் சக்திவாய்ந்தது.

**ரெக்ஸோனா. குடும்ப சோப்**

அழகான, பசுமைவாய்ந்த, விரைவில் நுரையைத் தரும் இந்த சிறந்த ஒப்பற்ற சோப்பின் குணங்களைக் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் புகழ்ந்து கூறுவார்கள். . . சரும அழகைத்தர அது அதிக சிறந்த சக்திவாய்ந்திருப்பதால் ஸ்திரீகள். . . ஆரோக்யமான சருமத்தின் அவசியத்தை எல்லா ஜனங்களும் அறிந்திருப்பதால் மனிதர்கள் . . . குழந்தைகளுக்கு இதைக் காட்டிலும் சிறந்த பாதுகாப்புடைய சோப் வேறு இல்லை மருந்திடப்பட்ட ரெக்ஸோனாவின் நுரை உடலெரிச்சலைச் சாந்தப்படுத்துகிறது, ரணங்களை ஆற்றிக் காப்பாற்றுகிறது—குழந்தையின் சருமத்தைக் குளிர்ச்சியாகவும், மிருதுவானதாகவும் செய்கிறது சரும சுகம் நிச்சயமாக ஏற்படக் குடும்பம் முழுவதும் ரெக்ஸோனாவை ஒழுங்காய் உபயோகிக்க வேண்டும்.



★ரெக்ஸோனாவிலுள்ள கேடில் கிருமி நாசினியாகிய ஒரு ஒப்பற்ற கலப்பு மருந்து. சரும சுகத்திற்கு அதிக சக்திவாய்ந்தது; குணமளித்துப் போஷிக்கும் தைலம் சேர்ந்தது. சுகத்தையளித்து காப்பாற்றும் தன்மையுள்ள கேடில் யாவராலும் மதிக்கப்பட்டு, விஞ்ஞானிகளால் பரிசோதனை செய்யப்பட்டிருக்கிறது.

ரெக்ஸோனா ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள். வெட்டுக் காயங்கள், புண்கள், கட்டிகள், கரப்பான் ரணங்கள், முகப்பருக்கள், அரிப்புகள், சிரங்குகள், படைகள், மச்ச மருக்கள் முதலிய எல்லா சரும வியாதிகளுக்கும் ரெக்ஸோனா ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள்.



RP. 29-23-40 TM

REXONA PROPRIETARY LIMITE

# கல்கி பொருளடக்கம்


மலர் 6
இதழ் 8

1946 செப்டம்பர் 22

வியஹ
புரட்டாசி 6






"உலகத்தில் சமீபகாலத்தில் இரண்டு மகத்தான சம்பவங்கள் நடந்திருக்கின்றன. ஒன்று, அணுவின் மகா சக்தியைப் பிரயோகப் படுத்த வழி கண்டு பிடித்தது; முக்கியத்தில் அதற்குச் சிறிதும் குறைவில்லாத மற்றொரு மகத்தான சம்பவம், இந்திய தேசத்தில் நாற்பது கோடி மக்கள் சுதந்திரம் அடைந்திருப்பது" என்று அயர்லாந்து பத்திரிகை ஒன்று எழுதியிருக்கிறது.




பண்டித ஜவாஹர்லால் நேருவின் தலைமையில் தேசிய சர்க்கார் ஏற்பட்டிருப்பதை இந்தியா பூரண சுதந்திரம் அடைந்து விட்டதற்கு அறிகுறியாகவே உலகம் ஏற்றுக் கொண்டிருக்கிறது.

அந்த தேசிய சர்க்காரில் பதவி வகிக்கும் தலைவர்களைக் குறித்து டில்லியில் வெளியாகும் ஒரு பிரபல வாரப்பத்திரிகை "ஆகா! இவர்கள் எப்பேர்ப்பட்டவர்கள்! ஒவ்வொருவரும் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் பிரதம மந்திரியாக இருந்து நிர்வகிப்பதற்குத் தகுதி பெற்றவர்கள்!" என்று பரவசப் பட்டு எழுதியிருக்கிறது.

அத்தகைய மாபெரும் தலைவர்களிலே வயிர நெஞ்சு படைத்த சர்தார் வல்லபாய் படேலும், சாத்விகமே உரு வெடுத்த பாபு ராஜேந்திரப்பிரஸாதும் மகாத்மா காந்தியை அவருடைய ஜாகையில் கண்டு பேசிவிட்டுப் புறப்படும் காட்சியை நமது அட்டைப் படம் பெருமிதத்துடன் தாங்கிக் கொண்டிருக்கிறது.

நூற்றைம்பது வருஷத்துக்கு மேலாக அன்னிய ஆட்சியின் கீழ் அடிமைப்பட்டிருந்த தேசத்தை, பொருள் வளமெல்லாம் சுரண்டப்பட்டுத் தொழில்கள் அழிந்து பயங்கரமான வறுமை மிகுந்துள்ள தேசத்தை, அறியாமையாலும் பசி பட்டினியாலும் பீடிக்கப்பட்ட நாற்பது கோடி மக்கள் வாழும் தேசத்தை, முன்னேற்ற மடையச் செய்வது என்பது இலேசான காரியமல்ல; பிரம்மப் பிரயத்தனமான காரியந்தான்.

ஆனால் அப்படிப்பட்ட பிரம்மப் பிரயத்தனமான காரியத்தை இப்போது தேசிய சர்க்காரை நடத்தும் அரும் பெரும் தலைவர்களால் சாதிக்க முடியவில்லையென்றால் வேறு யாராலும் சாதிக்க முடியாதென்பது சர்வ நிச்சயமாகும்.

கல்கி

மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 8

# என்ன சேதி?

## வாழ்க பல்லாண்டு!

ராஜாஜியின் மோட்டார் வண்டியின் மீது துப்பாக்கிக் குண்டு பாய்ந்தது என்ற செய்தியை அறிந்ததும் எண்ணற்ற தமிழர்கள் தங்கள் மார்பிலேயே குண்டு பாய்ந்ததுபோல் திடுக்கிட்டுப் போனார்கள். தேசத்தின் பொது உடைமையான அருமைத் தலைவரின் உயிரைக் காப்பாற்றிக் கொடுத்த கடவுளின் கருணையை வாழ்த்திப் போற்றினார்கள். ராஜாஜியின் சத்தியமும் மகாத்மாவின் ஆசியும் தமிழ் மக்களின் அளவிலாத அன்பும் மூன்று கவசங்களாக இருந்து ராஜாஜியைக் காப்பாற்றின என்று சொல்லலாம். அந்தக் கவசங்கள் அவரை வருங்காலத்திலும் காப்பாற்றி நூறாண்டு திடகாத்திரத்துடன் வாழச் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

## நல்ல சிறந்த பொறுப்பு

இந்தியாவின் முதலாவது தேசிய சுதந்திர சர்க்காரில் நமது தமிழ் நாட்டுத் தலைவர் மிகவும் பொறுப்புள்ள பரம முக்கியமான பதவியை ஏற்றிருக்கிறார். இந்தப் பெரிய தேசத்தின் வருங்கால வாழ்வும் முன்னேற்றமும் நாட்டின் தொழில் அபிவிருத்தியையே பெரிதும் பொறுத்திருக்கிறது. மற்ற நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியா தொழில் வளத்தில் மிகவும் பின்னால் இருந்து வருகிறது. நாற்பது கோடி மக்களின் உபயோகத்துக்கு அத்தியாவசியமான பொருள்கள் எல்லாம் மிகக் குறைவாக உற்பத்தியாகி வருகிறது. இதனால்தான் கள்ள மார்க்கெட், கொள்ளை லாபம், பஞ்சம், லஞ்சம் முதலிய தீமைகள் செழித்து வளர்கின்றன. இந்தத் தீமைகளையெல்லாம் ஒழிப்பதற்கு ஒரே வழி, தேசத்தின் தொழில் வளம் பெருகிப் பொருள் உற்பத்தி அதிகப்படுவதே யாகும். அந்த மிகக் கஷ்டமான கடமையைத்தான் ராஜாஜிக்கு நமது தேசத் தலைவர்கள் கொடுத்திருக்கிறார்கள். ராஜாஜியும் அந்தத் தலை சிறந்த பொறுப்பை ஏற்று நடத்தத் தொடங்கி விட்டார் என்பது இதற்குள்ளேயே வெளியாகி யிருக்கிறது. கைத் தொழில் சம்பந்தமான விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகத்தில் அவருடைய பிரசங்கமும், தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத நூறு பொருள்களுக்கு இறக்குமதித் தடையை எடுத்திருப்பதும் ராஜாஜியின் வேலைத் திறமைக்குச் சான்றாக விளங்குகின்றன. கடவுள் அருளினால் ராஜாஜியின் ஆயுள் பலமும் தேக சுகமும் பூரணமா யிருந்தால், ஸர் எம். விசுவேசுவரய்யா அமெரிக்காவில் சொல்லி யிருப்பதுபோல் இன்னும் சில வருஷங்களிலேயே இந்தியா தொழில் பெருக்கத்தில் மற்ற நாடுகளுக்குச் சமமாகும் என்பதில் சந்தேகமில்லை.

## சபாஷ், கல்வி மந்திரி!

நமது கல்வி மந்திரி ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் தமது வேலையில் எவ்வளவு சிரத்தையுடன் ஈடுபட்டிருக்கிறார் என்பது அவர் கல்விச் சீர்திருத்தம் சம்பந்தமாகப் பொது மக்களுக்கு விடுத்திருக்கும் கேள்விகளிலிருந்து வெளியாகிறது. ஸ்ரீ அவிநாசிலிங்கத்தின் மூலம் நமது கல்வி முறையில் புரட்சிகரமான மாறுதல் ஏற்படுமென்று நாம் எதிர்பார்த்தது வீண் போகாதென்ற நம்பிக்கை ஏற்படுகிறது. இது குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்.

## மனோரதப் பூர்த்தி

நானது 1946-ம் வருஷத்தை நமது மனோரதப் பூர்த்தி வருஷம் என்று சொல்லலாம். முக்கியமாக இந்த வருஷத்தின் பிற்பகுதியில் நமது மனோரதங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அதி வேகமாகப் பூர்த்தியாகி நம்மை மூச்சுத் திணறச் செய்கின்றன. "கல்கி" 1941-ம் வருஷத்துச் செப்டம்பர் மாத முதல் தேதி இதழில் பண்டித ஜவாஹர்லால்

நேருவின் படத்தைப் போட்டு அதனடியில் "நாற்பது கோடி இந்திய மக்களின் இருதய பீடத்தில் வீற்றிருக்கும் அரும் பெரும் தலைவர் இந்திய அரசாங்கத்தின் தலைமைப் பீடத்திலும் வீற்றிருக்க மாட்டாரா?" என்று எழுதியிருந்ததை ஒரு தர்மபுரி நேயர் ஞாபகப்படுத்தி அந்த மனோரதம் இப்போது பூர்த்தியாகிவிட்டதைச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

## அதற்கு மேலே ஒன்று

ஜவாஹர்லால்ஜி இந்திய அரசாங்கத்தின் தலைவரானதற்கு மேலே நமது இன்னொரு மனோரதமும் பூர்த்தியாகியிருக்கிறது. இவ் வருஷ ஆரம்பத்தில் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி வந்த சமயம், அவர் மற்றொரு முறை வெளி நாட்டுக்குப் போகும்போது சுதந்திர இந்திய சர்க்காரின் அதிகாரம் பெற்ற ஸ்தானாதிபதியாகச் செல்லுவாரென்று எதிர்பார்ப்பதாக எழுதியிருந்தோம்.

இந்தியாவின் ராஜ்ய பாரத்தை ஏற்றிருக்கும் இடைக்கால தேசிய சர்க்கார், சர்வ தேச மகாநாடுகளுக்கு இந்திய மக்களின் நன்மதிப்பைப் பெற்ற பிரதிநிதிகளை அனுப்பத் தீர்மானித்திருக்கிறார்கள். அதன் பலனாக, முன்பு பிரிட்டிஷ் சர்க்காரின் தலையாட்டிப் பொம்மைகளாக இருந்து, சர்வதேச மகாநாடுகளில் பிரிட்டனுடன் சேர்ந்து வோட்டுச் செய்வதே தங்கள் வேலையென்று கருதிய பல சாம்ராஜ்ய தாசர்களுக்கு இப்போது சீட்டுக் கிழிந்திருக்கிறது. இந்திய சர்க்காரின் அங்கீகாரமும் அதிகாரமும் பெற்ற பிரதிநிதியாக ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் இம்முறை ஐக்கிய தேச மகா சபையின் இந்தியத் தூதுகோஷ்டிக்குத் தலைமை வகித்துச் செல்லப் போகிறார்.

நாற்பது கோடி இந்திய மக்களின் சார்பாக ஒரு பெண்மணி தூது சென்று, உலகத்திலே புகழ்பெற்ற ராஜ தந்திரிகளுக்கும் அறிஞர்களுக்கும் மத்தியிலே பல விவாதங்களில் கலந்து கொள்வது இந் நாட்டுக்குக் கிடைத்திருக்கும் தனிப் பெரும் அதிர்ஷ்டமாகும்.

## ருஷ்யா வருகிறது

ருஷ்யாவைப் பற்றி நமக்கு வேறு எதுவும் தெரியாவிட்டாலும், மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் சர்க்காரின் தயவினாலே, ஒரே ஒரு விஷயம் மாத்திரம் நன்றாகத் தெரிந்திருக்கிறது. அதாவது ருஷ்யாவுக்கு இந்தியாவின் மேல் எப்போதும் ஒரு கண் இருக்கிறது என்பதேயாகும்.

பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவில் காலடி எடுத்து வைத்த காலம் முதல் நமக்கு இந்த ருஷ்யப் பூச்சாண்டியைக் காட்டி வந்தார்கள். அந்த ருஷ்யப் பேரபாயத்திலிருந்து நம்மைக் காப்பதற்காக நம்முடைய செலவிலேயே லட்சக்கணக்கான துருப்புக்களைக் கைபர் கணவாயருகே நிறுத்தி வைத்திருந்தார்கள். ஆனால், அந்தப் பாழாய்ப் போன ருஷ்யர்கள் இதுவரையில் ஒரு முறையாவது இந்தியாவின் பக்கம் எட்டிப் பார்க்கவில்லை. ஒரு பீரங்கியைக்கூட எல்லைப்புறத்தருகே கொண்டு வரவில்லை. பாமீர் மலைக்குப் பின்னாலே ஒரு வெத்து வேட்டைக்கூடக் கிளப்பவில்லை.

பிரிட்டிஷ் சர்க்கார் சொன்னதெல்லாம் பொய்யாகப் போகும் போலிருக்கிறதே என்று நாம் யோசித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் ஒரு ருசிகரமான தகவல் வந்திருக்கிறது. ருஷ்யர்கள் இந்தியாவை நோக்கி வருவதாகவும் அவர்கள் இமய மலைக்குப் பின்னால் காஷ்மீரத்துக்குப் பக்கத்திலே தங்கியிருப்பதாகவும் ஒரு செய்தி கிடைத்திருக்கிறது. நம்முடைய முஸ்லிம் லீக் பிரமுகர்கள் சிலருக்கு மேற்படி செய்தி நாக்கில் ஜலம் ஊறச் செய்திருக்கிறதென்பதில் சந்தேகமில்லை. ஆறு மாதத்துக்கு முன்னாலேயே ஸர் பெரோஸ் கான் நூன் என்பவர் பிரிட்டிஷார் இந்தியாவில் பாகிஸ்தானை ஸ்தாபிக்காவிட்டால் இந்திய முஸ்லிம்கள் ருஷ்யாவின் பக்கம் திரும்ப வேண்டியிருக்குமென்று எச்சரித்தார். அதே மாதிரி சில தினங்களுக்கு முன்னால் ஜனாப் ஜின்னாவும் ஒரு சூசகத்தைக் காட்டினார்.

## பொல்லாத ருஷ்யர்கள்

ஆனால் அந்தப் பொல்லாத ருஷ்யர்கள் ரொம்ப ரொம்பப் பொல்லாதவர்கள் என்று தோன்றுகிறது. ஏற்கெனவே அவர்கள் பிரிட்டிஷாரை ஏமாற்றியதுபோல் இப்போது முஸ்லிம் லீக் பிரமுகர்களையும் ஏமாற்றி விடுவார்கள் போலிருக்கிறது. ருஷ்ய சோவியத் சர்க்காரின் அயல் நாட்டுக் கொள்கைகளை அதிகாரபூர்வமாக வெளியிடும் "நியூ டைம்ஸ்" என்னும் ருஷ்யப் பத்திரிகை, "இந்திய அரசியல் பிரச்னையில் எங்கள் பெயரை ஏற்கெனவே பிரிட்டிஷார் உபயோகித்து வந்தார்கள். இப்போது முஸ்லிம் லீக் ஆசாமிகள்

உபயோகிக்கிறார்கள். இரண்டும் ஒன்றுதான்!" என்று திட்டமாக எழுதியிருக்கிறது. ருஷ்யர்கள் ரொம்பப் பொல்லாதவர்கள்தான்.

## பலே குட்டிக்கரணம்!

அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் இராஜதந்திரத்தில் மாத்திரம் அல்ல, குட்டிக்கரணம் அடிப்பதிலும் பலே கெட்டிக்காரர் என்று தெரியவருகிறது. குட்டிக்கரணம் அடிப்பதில் அவருக்குள்ள கெட்டிக்காரத்தனத்தைப் பார்க்கும்போது, அவர் அரசியலை விட்டுவிட்டு ஒரு சர்க்கஸ் கம்பெனி ஆரம்பிக்கலாமென்று சென்ற வாரம் நிகழ்ந்த ஒரு சம்பவத்திலிருந்து வெளியாகிறது.

அமெரிக்க மந்திரிகளில் ஒருவரான ஹென்றி வாலெஸ் சென்ற வாரத்தில் அமெரிக்க வெளிநாட்டுக் கொள்கையைக் குறிப்பிட்டு ஒரு பிரசங்கம் செய்தார். மேற்படி பிரசங்கம் பத்திரிகைகளில் வெளியானதும், பத்திரிகை நிருபர்கள் ஜனாதிபதி ட்ரூமனிடம் சென்று, "ஹென்றி வாலெஸின் கருத்தைத் தாங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?" என்று கேட்டதற்கு, அவர் பலமாகத் தலையசைத்து, "ஆஹா, ஒப்புக்கொள்ளுகிறேன்; திவ்யமாக ஒப்புக்கொள்ளுகிறேன்!" என்றார். மறுநாள், அதாவது சரியாக இருபத்திநாலு மணி நேரம் கழிவதற்குள்ளாக, ட்ரூமன் உலகமே இதுவரை கண்டிராத அந்த மாபெருங் குட்டிக் கரணத்தை அடித்தார்! "ஹென்றி வாலெஸின் பிரசங்கத்தை நான் ஒப்புக்கொள்ளவே இல்லை. ஐயோ! நான் ஒப்புக் கொள்ளவே மாட்டேன். ஹா ஹா! எனக்கு மயக்கமாக வருகிறதே! எல்லோரும் என்னைப் பிடித்துக் கொள்ளுங்கள்!" என்று அலறினார்.

மயக்கம் தெளிந்து எழுந்த பிறகு, "வாலெஸுக்கு அவருடைய அபிப்பிராயத்தைச் சொல்ல உரிமையுண்டு என்றுதான் நான் சொன்னேனே தவிர அவருடைய அபிப்பிராயத்தை அங்கீகரிக்கவில்லை!" என்று மட்டைக்கு இரண்டு கீற்றாக விளக்கிக் கூறினார்.

## என்னத்தைச் சொன்னார்?

அமெரிக்க மந்திரி சபையில் பொறுப்பு வாய்ந்த பதவியில் இருக்கும் வாலெஸ் அப்படி என்னத்தைச் சொல்லி விட்டார்? அதை அவ்வளவு அவசரமாக ட்ரூமன் வாபஸ் வாங்க வேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது?

வேறு ஒன்றும் இல்லை; வாலெஸ் உண்மையைச் சொன்னார்!

அதாவது, ருஷ்யாவோடு அமெரிக்கா விரோதத்தை வளர்த்துக் கொள்ளக் கூடாது என்றும், அமெரிக்கா கண்மூடித்தனமாகப் பிரிட்டனுடைய ஏகாதிபத்தியக் கொள்கையைப் பின்பற்றக் கூடாது என்றும், இந்த விஷயத்தில் ஜாக்கிரதையாக இல்லாவிடில் மூன்றாவது உலக மகா யுத்தம் ஏற்படுவது நிச்சயம் என்றும் கூறினார்.

இவ்வளவுதான் விஷயம். அமெரிக்காவின் அன்னிய நாட்டு மந்திரியான மிஸ்டர் ஜேம்ஸ் பர்ன்ஸ் பாரிஸ் மகாநாட்டில் கடைப்பிடிக்கும் கொள்கையைக் கண்டிப்பதுபோல் அமைந்தது வாலெஸின் பேச்சு. எனவே, அமெரிக்காவிலுள்ள ருஷ்யாவுக்கு விரோதமான முதலாளி வர்க்கமும் அந்த வர்க்கத்தைச் சேர்ந்த பத்திரிகைகளும் வெகுண்டு எழுந்தன. வாலெஸை ஓரே தாக்காகத் தாக்கியதோடு, ட்ரூமனையும் சேர்த்துச் சக்கைப் போடு போட்டன. அதன் பேரில் ஜனாதிபதி ட்ரூமனின் உலகப் பிரசித்தி பெற்ற குட்டிக் கரணம் நிகழ்ந்தது! வாலெஸின் பேச்சினால் ஏற்பட்டிருக்கும் தர்ம சங்கடமான நிலைமையிலிருந்து ட்ரூமன் எப்படி விடுதலையடையப் போகிறாரோ தெரியவில்லை.

---

### அறிவிப்பு

16-9-1946 முதல் கோயமுத்தூரில் நமது கல்கி விற்பனை ஏஜண்டு:

**ஸ்ரீ கே. சுப்பிரமணியம், (சுப்பி) எம். எல். ஏ.,**

91, கருப்பக் கவுண்டன் தெரு, கோயமுத்தூர்

**கோயமுத்தூர் வாசகர் இவ் வருஷக் கல்கி தீபாவளி மலருக்கு நமது ஏஜண்டு ஸ்ரீ சுப்பி அவர்களிடம் பதிவு செய்து கொள்ளவும்.**

மானேஜர், 'கல்கி'

# சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்?




பிரதம மந்திரி பிரகாசம் கடைசியாக வெளியிட்டிருக்கும் அறிக்கையில் விவசாயிகளுக்கு 'மேலும் போனஸ்' கொடுப்பதாகவும் அவர்களுடைய 16 அவுன்ஸ் ரேஷனை 12 அவுன்ஸாகக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்றும் சொல்லுகிறார்.

# பகவத் கீதை - புதிய பதிப்பு




சென்ற சனிக்கிழமை ராஜாஜியின் மோட்டார் வண்டியின் மேல் துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டுக் குண்டு பாய்ந்ததாகப் புதுடில்லி செய்தி சொல்லிற்று. கண்ணன் காட்டிய வழியைப் பின்பற்றும் ராஜாஜியைத் துப்பாக்கிக் குண்டு என்ன செய்து விடும்?

# திட்டம் வேண்டும், திறமையும் வேண்டும்!

சங்கீதக் கச்சேரி செய்த பாடகரைப் பார்த்து ரஸிகர், ''உங்களுடைய கச்சேரி ரொம்பவும் திருப்திகரமாயிருந்தது!'' என்றார். பாடகர் பரமானந்தமடைந்தவராய், ''கச்சேரியில் எந்தக் கட்டம் உங்களுக்கு அதிக திருப்தி யளித்தது?'' என்று கேட்டார். ''கச்சேரியின் முடிவில் மங்களம் பாடினீர்கள் அல்லவா? அதற்கப்புறம் இந்த மட்டும் கச்சேரி முடிந்ததே என்று ரொம்பத் திருப்தியாயிருந்தது!'' என்றார் ரஸிகர்.

சென்ற வாரத்தில் முடிவு பெற்ற சென்னைச் சட்ட சபையின் பட்ஜட் கூட்டத்தைப் பற்றியும் அம்மாதிரி சொல்லலாம். ''அப்பா! இந்த மட்டும் முடிந்ததே!'' என்று பொது மக்கள் திருப்தியும் சந்தோஷமும் அடையலாம்.

* * *

இந்தியா தேசத்திலுள்ள மாகாணச் சட்ட சபைகளில் சென்னை மாகாணச் சட்டசபை முன்னெப்போதும் ஒரு விதத்தில் இல்லா விட்டால் இன்னொரு விதத்தில் பிரசித்தி பெற்று விளங்கிற்று.

இரட்டை யாட்சி நடந்துகொண்டிருந்த காலத்தில் ஸ்ரீ சத்தியமூர்த்தி எதிர்க் கட்சியிலிருந்து செய்த வீரகர்ஜனை சென்னைச் சட்ட சபைக்குப் பெருமகிமையைத் தந்தது. மகாத்மா காந்தி சொன்னதுபோல் ஸ்ரீ சத்தியமூர்த்தி ஒருவரே எதிர்க் கட்சியிலிருந்து நூறு பேர் செய்யக் கூடிய வேலையைச் செய்து வந்தார். அதிகார வர்க்கத்தையும் அதனோடு கூட்டுச் சேர்ந்து ஆட்சி நடத்திய ஜஸ்டிஸ் கட்சியையும் திக்கு முக்காடும்படி அடித்தார்.

அதற்குப் பிறகு பூரண மாகாண சுயாட்சித் திட்டத்தின் கீழ் ராஜாஜி பிரதம மந்திரியாயிருந்தபோது, சென்னைச் சட்டசபை ஒப்பில்லாத கௌரவத்தை அடைந்தது. மற்ற மாகாணச் சட்ட சபைகளெல்லாம் சென்னையைப் பார்த்துப் பின்பற்றும் அந்தஸ்தை வகித்திருந்தது.

அதற்கெல்லாம் மாறாக இந்தத் தடவை சென்னைச் சட்ட சபையானது அதனுடைய பழைய கௌரவத்தை அடியோடு இழந்து விட்டதாகக் காணப்பட்டது.

சட்ட சபையின் கௌரவத்தை அதிகமாக்கும் முறையில் மந்திரி சபையும் அமையவில்லை.

காங்கிரஸ் மாபெருந் தலைவர்களின் யோசனையைப் புறக்கணித்து ஏற்பட்ட மந்திரி சபை தன்னுடைய முன்னேற்றக் காரிய திட்டங்களினால் அந்த அபகீர்த்தியைப் போக்கடித்துக் கொள்ளும் என்று நாம் கொண்டிருந்த நம்பிக்கை நிறைவேறவில்லை.

சட்ட சபையில் பெரும்பான்மையோரான காங்கிரஸ் எம். எல். ஏ.க்களில் பலர் சட்ட சபைக் கூட்டங்களுக்குச் சரியாக ஆஜராகவில்லை.

இதனால் பல சமயங்களில் 'கோரம்' இருக்கிறதா இல்லையா என்ற சந்தேகமும் ஏற்படலாயிற்று.

எதிர்க் கட்சிக்காரர்களான முஸ்லிம் லீக் அங்கத்தினர் சட்ட சபைக்கு ஒழுங்காக ஆஜராகிச் சபையைக் 'கோரம்' இல்லாத விபத்திலிருந்து காப்பாற்றினார்கள்.

* * *

சட்ட சபையில் மிகப் பெரும்பான்மையோரான காங்கிரஸ் அங்கத்தினர் கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவர்களாதலால் அவர்கள் மந்திரி சபையின் தீர்மானங்களை எதிர்த்தோ, அவற்றுக்குப் புறம்பாகவோ எதுவும் செய்ய முடியவில்லை. மந்திரி சபை கொண்டு வந்த எந்தப் பிரேரணைக்கும் அவர்கள் கைதூக்க வேண்டியவர்களாயிருந்தார்கள். எனவே, சட்ட சபை நடவடிக்கைகளில் அவர்கள் அதிக சிரத்தை கொள்ளவில்லை.

எதிர்க் கட்சியினராகிய முஸ்லிம் லீக் அங்கத்தினர் சட்ட சபையில் ஏராளமாகத் தாராளமாகப் பேசினார்கள். ஆனால் பெரும்பாலும் பயன் ஒன்றும் இல்லை. தப்பித் தவறி மந்திரி சபை ஏதாவது ஒரு நல்ல காரியத்

தைச் செய்து விட்டால் அதைக் குறி பார்த்து முஸ்லிம் லீக்கினர் கூராக எதிர்த்தார்கள்! எனவே, லீக்கினர் ஏதாவது நல்ல காரியத்தை ஆதரித்துப் பேசினால்கூட அதற்கு மதிப்பு இல்லாமற் போயிற்று.

காங்கிரஸ் அங்கத்தினரில் ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர், ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரி, ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை முதலிய ஒரு சிலர் கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுத் திணறிய வண்ணம் பொது மக்களின் நன்மைக்கான விஷயங்களை வற்புறுத்தினார்கள். அவர்கள் வற்புறுத்தல் அதிக பயனளித்ததாகச் சொல்ல முடியாது.

ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் அவர்களுடைய முயற்சி மற்றக் காங்கிரஸ் அங்கத்தினரின் ஆதரவையும் பெற்று நல்ல பலன் தந்தது.

அது மதுவிலக்கு விஷயந்தான்.

மந்திரி சபையார் நாலு ஜில்லாக்களில் மதுவிலக்குக் கொண்டுவர எண்ணியிருந்தார்கள். அதற்கு மேல் முடியவே முடியாது என்று சாதித்தார்கள். அவர்களுடைய சாதனையை மாற்றிக் காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் நாலு ஜில்லாவை எட்டு ஜில்லாவாக அதிகரித்தார்கள்.

பட்ஜட் கூட்டத்தில் சட்டசபை சாதித்த ஒரே நல்ல காரியம் மேற்கண்டதுதான்.

* * *

மது விலக்குத் திட்டம் ஒன்றைத் தவிர மற்றப்படி சென்னை மந்திரி சபை பொதுஜன நன்மைக்குரிய உருப்படியான திட்டம் எதையும் கொண்டு வந்து நிறைவேற்றவில்லை.

முக்கியமான காரியங்களில் பொது நன்மைக்குரிய முன் யோசனையான திட்டம் எதையும் மந்திரி சபை உருப்படுத்தவேயில்லை.

தற்சமயம் தேச மக்களுக்கு மிகவும் முக்கியமான பிரச்னைகளாயிருப்பவை (1) உணவு, (2) உடை, (3) குடியிருக்க வீடு என்னும் மூன்றுதான்.

ஜனங்களுக்கு அவசியமாக வேண்டிய மேற்படி மூன்று வசதிகளும் இப்போது மிகக் குறைவாயிருக்கின்றன.

அந்த மூன்று குறைபாடுகளையும் நிரப்புவதற்கு மந்திரி சபையாரின் திட்டம் எதுவும் வெளியாகவில்லை.

அதற்கு மாறாக மேற்படி மூன்று இன்றியமையாத தேவைகள் விஷயத்திலும் மந்திரி சபை முன் யோசனையில்லாத காரியங்களைச் செய்து நிலைமையை மேலும் குழப்பிக் குட்டிச் சுவராகப் பண்ணியிருக்கிறது.

* * *

முதலில் உணவுப் பிரச்னையைக் கவனிக்கலாம்.

ஏற்கனவே 16 அவுன்ஸ் தானியம் சென்னை மாகாண வாசி ஒவ்வொருவருக்கும் கிடைத்துக் கொண்டிருந்தது. பிரகாசம் மந்திரி சபையின் நிர்வாகத்தில் அது பாதியாகியிருக்கிறது: அதாவது எட்டு அவுன்ஸாகக் குறைந்திருக்கிறது.

அந்த 8 அவுன்ஸிலும் இரண்டு அவுன்ஸைக் குறைத்து ஆறு அவுன்ஸாகப் பண்ண வேண்டி வரலாம் என்று பிரதம மந்திரி பயமுறுத்தியிருக்கிறார்.

மேற்படி விபத்தைத் தடுப்பதற்காக விவசாயிகளுக்கு ஏற்பட்டிருந்த 16 அவுன்ஸ் ரேஷனில் 4 அவுன்ஸ் குறைத்துக்கொள்ளச் சொல்கிறார்.

அதற்காக ஒரு கலத்துக்கு இரண்டு ரூபாய் அதிகப்படி போனஸ் தொகை தருவதாக ஆசை காட்டுகிறார்!

இந்த அதிகப்படி போனஸ் தருவதாக ஜூலை மாதத்தில் சொல்லியிருந்தாலும் கொஞ்சம் குறுவை விளைச்சல் அதிகமாகியிருக்கும். அப்போது சும்மா இருந்து விட்டு இப்போது சொல்வதினால் என்ன பிரயோஜனமோ, தெரியவில்லை.

மொத்தத்தில் இப்போது செய்திருப்பதெல்லாம் ஏற்கனவே வழக்கம் போல் விளையும் தானியத்தை விவசாயிகளிடமிருந்து சுரண்டி எடுத்துக் கொள்வதற்கும், யாரை எவ்வளவு பட்டினி போட்டு யாருடைய வயிற்றை எவ்வளவு நிரப்பலாம் என்பதற்கும் பயன்படும் காரியங்களே தவிர, உணவுக் குறைபாட்டை நீக்குவதற்கான தீர்க்க திருஷ்டியுள்ள திட்டங்கள் அல்ல.

உணவுக் குறைபாட்டை உள்ளபடி நீக்குவதற்கு எந்த மாதிரி திட்டம் போட வேண்டும்?

முதலில் பின்வரும் புள்ளி விவரங்களைச் சந்தேகத்துக்கிடமின்றிச் சேகரித்துக் கொள்ள வேண்டும்:—

1. சென்னை மாகாணத்தின் ஜனத் தொகை எவ்வளவு?

2. குறைந்த பட்சம் 16 அவுன்ஸ் விதம் இம் மாகாண வாசிகள் எல்லாருக்கும் உணவு கிடைப்பதற்கு எவ்வளவு தானியம், — அரிசி, சோளம், கம்பு, ராகி ஆகியவை வேண்டும்?

3. தற்போது, சாதாரண சுபிட்ச காலத்தில் எவ்வளவு விளைகிறது?

4. துர்ப்பிட்சமான காலத்தில் எவ்வளவு தானியம் விளைகிறது?

5. இன்னும் எவ்வளவு அதிகமாக விளைந்தால் சுபிட்ச காலத்தில் எல்லாருக்கும் தினம் 16 அவுன்ஸ் தானியம் கொடுத்து, துர்ப்பிட்ச காலத்துக்கென்று கையிருப்பில் போதிய அளவு தானியம் வைத்துக்கொள்ள முடியும்?

மேலே கண்ட ஐந்து கேள்விகளுக்கும் பதில் கண்டு பிடித்துக் கொண்டு பிறகு உணவுக் குறைவை நிவர்த்திப்பதற்காக விளைவை அதிகமாக்கத் திட்டம் போட வேண்டும்.

தானிய விளைவை அதிக மாக்குவதற்கு இரண்டு முக்கியமான வழிகள் இருக்கின்றன.

1. ஏற்கெனவே விவசாயம் செய்யப்படும் நிலங்களை மேலும் வளப்படுத்தி அதிகமாக விளையும்படி செய்தல்.

தற்சமயம் நமது மாகாணத்திலுள்ள விவசாய நிலங்கள் பூரண பலன் கொடுப்பதில்லை யென்பது நிஸ்ஸந்தேகமான விஷயம்.

தக்கபடி உரம் போட்டு வளப்படுத்தினால் விளைவை ஒன்றுக்கு இரண்டு மடங்கு பெருக்கலாம். குறைந்த பட்சம் 100-க்கு 50 விதம் விளைவை நிச்சயம் அதிகமாக்கலாம்.

2. இதுவரை விவசாயத்துக்குக் கொண்டு வரப்படாத தரிசு நிலங்களைப் பண் படுத்தி விவசாயம் செய்ய வேண்டும்.

இம்மாதிரி புதிதாக விவசாயத்துக்குக் கொண்டு வரக்கூடிய நிலங்கள் இம் மாகாணத்தில் லட்சக் கணக்கான ஏக்கராக்கள் இருக்கின்றன.

பழைய நிலங்களை வளப்படுத்துவதற்குப் பெரிய அளவில் ரசாயன உரங்களை உற்பத்தி செய்து விவசாயிகளுக்குக் கொடுக்கவேண்டும்.

புதிய நிலங்களைச் சாகுபடிக்கு லாயக்காகச் செய்வதற்கு நவீன விவசாயக் கருவிகளை உற்பத்தி செய்தும் தருவித்தும் கொடுக்க வேண்டும்.

இன்னும் விவசாயிகளை உற்சாகப் படுத்துவதற்குரிய பல முறைகளையும் கையாள வேண்டும்.

ஐந்து வருஷத் திட்டம் ஒன்று போட்டுக்கொண்டு வருஷத்தில் இவ்வளவு வரை தானிய விளைவை அதிகமாக்குவ தென்று பிடிவாதத்துடன் திறமையாகக் காரியம் செய்ய வேண்டும்.

பம்பாயில் அத்தகைய ஐந்து வருஷத் திட்டம் போட்டுக் கொண்டு திறமையாகக் காரியம் செய்யத் தொடங்கி விட்டார்கள்.

இந்த மாகாணத்திலோ அத்தகைய திட்டமும் போடப்பட வில்லை; திட்டத்தை நிறைவேற்றத் திறமையும் பூஜ்யமா யிருக்கிறது.

* * *

உணவுக் குறைபாட்டை நீக்குவதற்காவது ஐந்து வருஷம் வேண்டும்.

துணிப் பஞ்சத்தைப் போக்குவதற்குத் திறமையான முறையில் காரியம் செய்தால் ஒரே ஒரு வருஷம் போதும்.

இந்த மாகாணத்திலுள்ள நூல் ஆலைகளைத் தக்கபடி கண்காணித்துக் கண்டிப்புச் செய்தால் 100-க்கு 50 விதம் நூல் உற்பத்தியை உடனே அதிக மாக்கலாம்.

அப்படி உற்பத்தியாகும் நூல் முழுவதையும் கள்ள மார்க்கெட்டுக்குப் போகாமல் சர்க்கார் டெலிவரி எடுத்துக்கொண்டால், இந்த மாகாணத்திலுள்ள ஐந்து லட்சம் கைத் தறிகளுக்கும் போதிய நூல் கிடைக்கும்.

அவ்வளவு நூலும் நெய்யப்பட்டுத் துணியாகி மார்க்கெட்டுக்கு வந்தால், துணிப் பஞ்சமே கிடையாது.

ஒரு வருஷம் இதைத் திறமையாக நடத்தினால், அப்புறம் பிளாக் மார்க்கெட்டே இல்லாமற் போகும்; கண்ட்ரோலுக்கும் அவசியமிராது.

நெசவுத் தொழிலாளர், ஜவுளிக் கடை வியாபாரிகள், துணி வாங்கும் பொது ஜனங்கள் எல்லாருடைய கஷ்டமும் ஒரே அடியில் தீர்ந்து போகும்.

* * *

உணவுப் பஞ்சத்துக்கும் துணிப் பஞ்சத்துக்கும் அடுத்தபடியாகக் குடியிருக்கும் வீட்டுக் கிராக்கி ஜனங்களைப் பெரிதும் வாட்டுகிறது.

இதற்காக வீட்டு வாடகைக் கண்ட்ரோல் மசோதா ஒன்று சட்டசபையில் வந்து நிறைவேறியது.

முதலில் மசோதாவில் காணப்பட்ட குறைபாடுகள் சில பின்னால் நீக்கப்பட்டது பற்றிச் சந்தோஷப்படுகிறோம்.

ஆனால் மேற்படி வாடகைக் கண்ட்ரோல் சட்டத்தினால் வீட்டுப் பஞ்சம் தீர்ந்து போய்விடாது.

மூன்று வருஷ காலத்திற்குள் ஒரு லட்சம் வீடுகள் கட்டுவதற்குச் சர்க்கார் திட்டம் போட வேண்டும்.

வீடு கட்டுவதற்குரிய சாமான்களைக் கூடியவரை உற்பத்தி செய்தும், முடியாததைத் தருவித்துக் கொடுத்தும் உதவ வேண்டும்.

சர்க்கார் தங்களுடைய சிப்பந்திகளுக்கென்று ஆயிரக்கணக்கான வீடுகளைக் கட்ட வேண்டும்.

சொந்தத்தில் வீடு கட்டிக்கொள்கிறவர்களுக்குக் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுத்து உதவ வேண்டும்.

இங்கிலாந்து முதலிய முன்னேற்றமான தேசங்களிலெல்லாம் இப்படித்தான் செய்கிறார்கள்.

வீடு கட்டும் திட்டம் போட்டு நடத்துவதினால் எவ்வளவோ லட்சக் கணக்கானவர்களுக்கு வேலை கிடைக்கும்.

வீடு கட்டும் உபகரணங்களாகிய செமண்டு, செங்கல் முதலியவை செய்யும் உப தொழில்கள் பல செழிக்கும்.

தேசத்தின் க்ஷேமத்தை வளர்ப்பதற்கு வீடு கட்டும் திட்டம் ஒரு நல்ல வழி என்று உலகமெங்கும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

அப்படிப்பட்ட தீர்க்க திருஷ்டியுள்ள திட்டங்களை, தேச நன்மைக்குகந்த திட்டங்களை நமது மந்திரிகள் தயாரிக்கவில்லை. சட்ட சபையில் அவற்றைக் குறித்துப் பிரஸ்தாபிக்கவும் இல்லை.

அதிக பயன் ஒன்றுமில்லாத சர்வ சாதாரண விஷயங்களைப் பற்றிச் சிரத்தையில்லாமல் விவாதிப்பதிலேயே காலங் கடத்திச் சட்டசபைக் கூட்டத்தை முடித்து விட்டார்கள்.

அறிவாளிகளும் திறமைசாலிகளும் மிகுந்த சென்னை மாகாணத்துக்கு இப்போது அநிருஷ்ட யோகம் நடக்கிறது என்று தோன்றுகிறது.

## அஸ்திவாரத்துக்கு ஆபத்து!



# வானசஞ்சாரம்

இசைத்தேனீ

நமது இசைக் கருவிகளில் மிகச் சிறந்தது வீணையே. நாதத்துக்கு இழைப்புகளானவை கமக நிருபணத்துக்காகவே அது ஏற்பட்டிருக்கிறதென்னலாம். அத்துடன் ஸ்திரீகளின் குரலுக்கு மிகப் பொருத்தமானது. வீணையைச் சிறந்த முறையில் அழகாகக் கையாண்டு வாசிக்கும் ஸ்திரீகளில் ஒருவர் ஸ்ரீமதி எம். ஜி. கௌரிகுமாரி என்பது 10ல் சென்னையில் நடந்த அவரது கச்சேரியைக் கேட்டவர்களுக்கு நன்கு விளங்கியிருக்கும். மீட்டுடன் இழையும் ஒலியழகும், எடுத்ததும் ராக மூர்ச்சனை தெளிவாய் இலங்குவதும், உருப்படிகளில் ஸங்கதி வனப்பும், தானக் கச்சிதமும், மொத்தத்தில் எல்லாவற்றிலும் நிச்சய ஞானத்திறனான அழுத்தமும், பாவகமகப் பொழிவும், அவர் வாசிப்பின் விசேஷங்களாகும். அன்றைய கேடமல்லார், ஸாரங்கா, ஹரிகாம்போதி ராகங்களும் உருப்படிகளுமே அதற்கு அத்தாக்ஷி. இரண்டு வருஷங்களுக்கு முன் மியூஸிக் அகாடமி மகாநாட்டுச் சங்கீதப் போட்டியில் முதல் பிரைஸ் வாங்கினபோதே அவரது திறமை மெச்சப்பட்டது. அத்துடன் நின்றுவிடாமல் மேன்மேலும் தம் கலையைச் சிறப்பித்துக் கொண்டு வந்திருக்கிறார் என்பது அன்று தெரிய வந்தது.



ஸ்ரீமதி எம். ஜி. கௌரிகுமாரி

செப்டம்பர் 11ல் தமிழ் நாட்டுக்கு ஒரு முக்கிய நாளாகும். அது மகாகவி சுப்ரமணிய பாரதியாரின் ஞாபகார்த்த தினம். அன்று சென்னை, திருச்சி இரண்டு நிலையங்களிலும் பாரதியார் சம்பந்தமான நிகழ்ச்சிகள் நடைபெற்றன. 'நீக்குத் தெரியாத காட்டும்' என்ற கண்ணன் பாட்டை, ஆணும் பெண்ணுமாக இருவர் மாற்றி மாற்றிப் பாடி அமைத்துத் திருச்சியில் நடந்த இசை நிகழ்ச்சியானது இரண்டு ரேடியோ நிலையங்களிலும் நடந்த நிகழ்ச்சிகளுக்குள்ளே மிகவும் சிறப்பாக அமைந்தது.

12ல் சென்னையில் என். பாலசுப்ரமணியம், திருச்சியில் டி. கே. நடராஜ பாகவதர் இவர்களின் கச்சேரிகள் உயர்ந்த ரகமாயிருந்தன. முன்னவருக்கு நாதசாரீரம், நல்ல உதவுபடி. ரேவாணி, ஹிந்தோள ராகங்களும் உருப்படிகளும் நல் வடிவங்களாய் விளங்கின. பின்னவர், கன சாரீரத்தில், நல்ல ஞான பாவத்துடன், வழங்கிய கமாஸ், சாவேரி ராகங்கள் நேர்த்தியா யிருந்தன.

13ல் மாலை சென்னையில் டி. சியாமளா ஜீவன் நிறைந்த குரலில் ஸாரங்கா, காமவர்த்தினி ராகங்களையும் 'ரகுவர' கிருதியில் ஸ்வரப்ரஸ்தாரத்தையும் திறம்பட வழங்கினர். ஞானத்துக் கேற்றவாறு குரலைச் சற்று மெருகு செய்து கொள்வாரானால் இன்னும் அழகா யிருக்கும்.

15ல் சென்னையில் டி. கே. ராதாகிருஷ்ணனின் வேணுகானமும், திருச்சியில் டி. எம். தியாகராஜனின் பாட்டும் முதல் தரமாயிருந்தன. முன்னவர் சுருதி சுத்தமும் நாதப் பொழிவும் கொண்டு, நீண்ட கார்வை குழைவுகளுடன் விஸ்தாரமாய் வழங்கிய காம்போதி வசீகரமாயிருந்தது. தியாகராஜனது ஸிம்மேந்திர மத்யமமும் பல்லவி ராகமாய் தோடியும் சிறப்பா விளங்கின.

# சேராத கடிதம்

மகா-ள-ள-ஸ்ரீ அஸ்திவார உத்தியோகஸ்தருக்கு அடியேன் ஆரம்பப் பாடசாலை உபாத்தியாயர் எழுதிக் கொள்வது:—

ஸார்! மிஸ்டர்! நான்தான் யோகசாலி என்று நினைத்தால் என்னைவிட நீர் பலே அதிர்ஷ்டக்காரர், ஐயா! நானெல்லாம் வாட்டுத் தவளையாய்க் கத்திப் பிள்ளைகளின் மண்டையில் பாடத்தைத் திணித்து வரும் என்னுடைய பரிதாப வாழ்க்கையைப் பார்க்கச் சகியாத பிரகாசம் மந்திரி சபை எனக்கு மாதம் இரண்டு ரூபாய் சம்பள உயர்வு கொடுத்திருக்கிறது. அந்த இரண்டு ரூபாயைக் கொண்டு என்னவெல்லாம் செய்யலாம்? இரண்டு டஜன் வாழைப்பழம் வாங்கிச் சாப்பிடலாம். கிழிந்துபோன சட்டையைத் தைத்துப் போட்டுக் கொள்ளலாம். காலுக்குச் செருப்பு வாங்கிக் கொள்ளலாம். தலைக்கு 'டர்பன்' வாங்கிக் கட்டலாம். இப்படி நான்தான் அதிர்ஷ்டக்காரன் என்றால் நீர் என்னைவிட ஒன்றரை மடங்கு அதிர்ஷ்டக்காரராயிருக்கிறீர்! உமக்கு மாதம் மூன்று ரூபாய் சம்பள உயர்வு கொடுத்திருக்கிறார்கள் அல்லவா? ஆஹா! முழுசாக மூன்று ரூபாய்! உம் தரித்திரமெல்லாம் தீர்ந்துவிட்டது, போம்! எப்படி என்று கேட்கிறீர்? உம்முடைய தரித்திரத்துக்கு முக்கிய காரணம் என்ன தெரியுமா? கருகருவென்று முகத்தில் வளரும் தாடி மீசைதான்! தாடி மீசைதானே தரித்திரத்தை எடுத்துக் காட்டுகிறது! தாடி மீசையை க்ஷவரம் செய்து தீர்த்துவிட்டால் தரித்திரமும் ஒழிந்து போய்விடுமல்லவா? அப்புறம் நீரும் தரித்திரத்தைக் காரணம் காட்டி சம்பள உயர்வு கேட்க மாட்டீரல்லவா? அதற்காகத்தான் பிரகாசம் மந்திரி சபை தீர்க்காலோசனை செய்து உம்முடைய மாதாந்திர க்ஷவரச் செலவுக்காக மூன்று ரூபாய் சம்பள உயர்வு கொடுத்திருக்கிறது. ஆனால் உம் தரித்திர புத்தி உம்மை விட்டுப் போகவில்லை! மேலும் அதிக சம்பளம் கேட்கிறீர்! வேலை நிறுத்தம் செய்வோமென்று பயமுறுத்துகிறீர்! இதோ ஆரம்பப் பாடசாலை ஆசிரியர்களாகிய நாங்கள் இரண்டு ரூபாயை நன்றியுடன் வாங்கிக்கொண்டு வந்தனம் செலுத்தி விட்டுச் சும்மா இருக்கவில்லையா? எங்களைப்போல் நீரும் இருப்பதற்கென்ன? உபாத்தியாயர் என்ற ஹோதாவில் நான் சொல்லுகிறேன். கீழ்ப்படிந்து நடக்கவும்! கொடுத்ததைக் கொண்டு திருப்தி அடையவும்! வேண்டாம் பேராசை! வேண்டாம் வேலை நிறுத்தம்! இப்படிக்கு,

ஆரம்பப் பாடசாலை வாத்தியார்.




அமெரிக்கா மந்திரி வாலேஸ் பிரிட்டனைத் தாக்கியும் ருஷ்யாவுக்குச் சாதகமாயும் பேசிய பேச்சினால் ஜனாதிபதி ட்ரூமன் பெரிய சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்.

# வட்ட மேஜை

விக்கி
4—9—46

அன்புடையீர்,

இந்தியக் குடியரசின் முதலாவது பிரசிடெண்டாக பண்டித ஜவாஹர்லால் நேரு வரப் போவதை எதிர்பார்த்த மருடபதி. சென்ற 2—9—46ல் இந்தியாவின் நாற்பது கோடி மக்களின் கனவை நிஜமாக்கிச் சரித்திரப் புகழ் பெற்ற டில்லியில் மக்களுக்குத் தொண்டு செய்ய ஜவாஹர்லால்ஜீ முதன் மந்திரியாக வந்திருப்பதை அறிவார் என்று நம்புகிறேன். ("மருடபதி" பக்கம் 226.)

மருடபதியின் வாய்மொழியாகத் தாங்கள் கூறிய ஆரூடம் இவ்வளவு சீக்கிரத்தில் பலித்து விட்டது குறித்துப் பெரிதும் மகிழ்கிறோம்.

ஆர். ராஜகோபாலன்.

[மேற்படி அன்பர் குறிப்பிட்டிருக்கும் மருடபதியின் வாய்மொழி வருமாறு:— "அப்படி யொன்றும் நான் வாழ்வை வெறுத்து விடவில்லை. இந்த உலகில் ஜீவித்திருக்கத்தான் விரும்புகிறேன். இந்தப் பாரத தேசம் சுதந்திரம் அடைந்து பார்க்க ஆசைப்படுகிறேன். இந்தியக் குடியரசின் முதலாவது பிரசிடெண்டாகப் பண்டித ஜவாஹர்லால் நேரு வருவதைப் பார்க்க விரும்புகிறேன்..." —ஆசிரியர்.]

பல்லாவரம்
16—9—46

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு.

நானும் எனது இரு சிநேகிதர்களும் சென்ற 14—9—46 சனிக்கிழமை சாயந்திரம் ஜார்ஜ் டவுனிலிருக்கும் அகில இந்திய காதி வஸ்திராலயத்துக்குச் சென்றோம். நாங்கள் எங்கள் சொந்தத்தில் 'தக்ளி' செய்து கொண்டிருப்பதாயும், எங்களுக்குத் தலா ¼ பவுண்டுக்குக் குறையாமல் நூற்பதற்குப் பருத்தி கொடுக்க வேண்டும் என்பதாயும் வஸ்திராலயத்தில் கேட்டோம். சர்க்கா சங்கத்தில் மெம்பர்களாக உள்ளவர்களுக்குத்தான் பருத்தி கொடுக்க முடியும் என்று தெரிவித்தார்கள். நாங்கள் சர்க்கா சங்கத்தில் சேரச் சம்மதிப்பதாகத் தெரிவித்தோம். ஆனால் அதற்கும் ஆறு மிட்டம் நூல் கொடுக்கிறவர்களைத்தான் மெம்பர்களாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று ரூல் இருப்பதாயும் ஆகையால் நூல் கொடுக்காவிடில் எங்களைச் சேர்த்துக்கொள்ள இயலாது என்றும் தெரிவித்து விட்டார்கள்.

"கலியாணம் ஆனால் பைத்தியம் தெளியும்; பைத்தியம் தெளிந்தால் கலியாணம் ஆகும்" என்று ஒரு வசனம் உண்டு. அந்த மாதிரியிருந்தது அவர்கள் சொன்ன பதிலும். அதாவது மெம்பராகச் சேர நூல் கொடுக்க வேண்டும்; நூல் நூற்கப் பஞ்சு வாங்க மெம்பராக வேண்டும். ஆனால் நூல் நூற்பதற்கு முதலில் பஞ்சுக்கு என்ன செய்வது என்று அவர்களைக் கேட்டதற்கு அவர்களால் சமாதானம் சொல்லமுடியாமல், நாங்கள் பூராவாகக் கதர் உடை உடுத்தி வரவில்லை என்றும் அதனால் எங்களுக்குத் தர உத்தரவு இல்லை என்றும் மறுபடியும் எங்களைத் திருப்பி அனுப்பப் பார்த்தார்கள். எங்களைப் போலவே நாங்கள் கேட்டுக்கொண்டிருக்கும் பொழுது பலர் பருத்தி கேட்டுக் கொடுக்கப் படாமல் திருப்பிப் போய்விட்டார்கள்.

கதர் வளர்ச்சிக்காகப் பெரும் முயற்சி நடத்துவரும் இக்காலத்தில் காதி வஸ்திராலயத்தில் வருகிறவர்களுக் கெல்லாம் வீண் சால்ஜாப்பு சொல்லித் திருப்பி அனுப்புவது சரியில்லை என்று வாதாடியதன் பேரில் எங்கள் மூவருக்கும் சேர்த்து ½ பவுண்டுதான் பருத்தி கொடுத்தார்கள்.

காதி வஸ்திராலயத்தின் மேற்கண்டபடி நடந்தால் கதர் அபிவிருத்தி எப்படி நடைபெறும்? அப்படிப் பருத்தியை வாங்கி ஜனங்கள் துஷ்பிரயோசனம் செய்து விடுவார்கள் என்கிற எண்ணத்துடன் இந்த மாதிரி சட்டதிட்டங்கள் இருந்தால், முதலில் ¼ பவுண்டு பஞ்சுக்கு இரண்டணா கூடுதலாய கிரயத்தை வாங்கிக் கொண்டு அதற்கு அடுத்த தடவை பருத்திக்கு வரும்பொழுது நூலுடன் வந்தால் அந்த இரண்டணாவைத் திருப்பிக் கொடுத்து விடும்படி ஏற்பாடு செய்ய வேண்டும்.

ரங்கநாதன்.

திருமங்கலம்
12—9—1946

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு.

பொதுஜன மந்திரி சபை என்ற புதிய பெயருடன் பிரதமர் பிரகாசத்தின் 93-வது ஆட்சி நடைபெறுகிறது. பொன்மலையில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தினால் ஏற்பட்ட உயிர்ச் சேதம், பொருட்சேதம் முதலியவைகளுக்குப் பாரபட்சமற்ற விசாரணை கண்டிப்பாய் நடக்க வேண்டும்.

ஒரு காலத்தில் இந்தப் பிரகாசம் "போலீஸின் சிப்போர்ட்டை நம்பாதீர்கள்" என்று கர்ஜித்தாரே, அதே பிரகாசம் போலீஸ் மந்திரியானவுடன் போலீஸ் சிப்போர்ட்டை 'சட்டம்' என்ற பெயர் வைத்துக்கொண்டு சட்ட சபையில் வாதாடுகிறார். தெ.இ.ர. தொழிற்சங்கக் காரியதரிசி ஸ்ரீ கே. அனந்த நம்பியார் எம்.எல்.ஏ. கடுமையாக, வார்த்தையானால் வர்ணிக்க முடியாதபடி அவ்வளவு கொடூரமாகத் தாக்கப்பட்டார் என்று செய்திகள் கூறுகின்றன.

அறுபது வயதான அவர் தாயாரையும் அவர் மனைவியையும் மற்றும் பெண்கள் பலரையும் வீட்டிலிருந்து வெளியே இழுத்துக் கடுமையான முறையில் தாக்கினார்கள் என்று (8-9-46) 'ஹிந்து' பத்திரிகையில் சொல்லப்படுகிறது. இதுதான் மக்களின் ஆட்சியோ? இதுதான் மக்களின் நன்மைக்கென்று ஏற்படுத்திய சர்க்காரோ? "தொழிலாளரின் நன்மைக்காகத்தான் அவர்களின் மண்டை உடைகிறப் போலீஸ் லத்தி பதம் பார்க்கிறது" என்று இரத்தக் கண்ணீருடன் கதறுகிறான் ஒரு தொழிலாளி.

கே. ராமையா.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: டி. சௌரிராஜன், 11, கிருஷ்ணய்யர் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை.

# கண்ணாடி வளையல்

சூடாமணி



"பானுவின் வீட்டிலே மட்டும் அவளுக்குப் பட்டுப் பாவாடை, தங்க வளையல், சங்கிலி எல்லாம் வாங்க நிறையக் காசிருக்கிறது. நம்ம வீட்டில் கண்ணாடி வளையல் வாங்கக் கூடக் காசில்லை என்கிறாயே பாட்டி, ஏன்?" என்று கேட்கிறாள் குழந்தை.—பகவானே! இதற்கு நான் என்ன பதில் சொல்வேன்?

கோபு கொஞ்சம் பெரியவனானதால் அவனுக்கு விவரம் புரிகிறது. எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் கௌரிக்கு என்ன புரியப் போகிறது? இந்தப் பச்சைக் குழந்தையிடம் பகை காட்டினார்களே அந்த மகாராஜிகள், அவர்களைத்தான் சொல்ல வேண்டும்! இந்தச் சிறு வயதில் கௌரி எவ்வளவோ பொறுமையாகத்தானிருக்கிறாள். ஏதோ, கெற்றுப் போதாத காலமென்றுதான் சொல்ல வேண்டும்.

நானும் ஒரு காலத்தில் சீரும் சிறப்புமாய்த்தானிருந்தேன் என்பதை இப்பொழுது சொல்லிக் கொண்டால் யாரேனும் நம்புவார்களா? அப்பொழுது, இப்படி ஒரு காலம் வருமென்று நான் கனவுகூடக் காணவில்லையே? அந்தக் கதையையெல்லாம் இப்பொழுது நினைத்து உபயோகமென்ன?

போனது போக இரண்டு ஜீவன்களையும் என் கழுத்திலே கட்டிவிட்டு அவனும் போய்விட்டான். நானும்தான் பலவிதமாய் மனத்தைத் தேற்றிக் கொள்கிறேன். காலம் இப்படியே இருக்குமா? எப்படியேனும் கஷ்டப்பட்டுக் கோபுவைக் கொஞ்சம் ஆளாக்கிவிட்டால் அப்புறம் நம் காலம் விடியாதா என்றுதான் திடப்படுத்திக் கொள்கிறேன்.

ஏதோ நாலு பெரிய இடத்தை அண்டினால் வயிறு வளர்த்து விடலாம் என்ற துணிவுடன் இந்த ஊருக்கு வந்தேன். ஆனால் நான் நினைத்தபடி என்னைப் பரிவுடன் ஆதரிப்போரைத்தான் காணவில்லை. பார்க்கப் போனால் மதுரத்தைக் கொஞ்சம் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால் அவளும் சில சமயம் கோமதியைப் பின்பற்றி நடப்பதை ஒரு பெருமையென எண்ணி விடுகிறாள். அதுதான் பிடிக்கவில்லை.

அம்மம்மா! கோமதியையும் அவளுக்கு ஏற்றாற்போல் அமைந்து வந்திருந்தார்களே சில ஸ்திரீ ரத்தினங்கள், அவர்களையும் நினைத்தாலே மனம் வெதும்புகிறது. ஒருக்கால் என்மேலும் தப்பிதமிருக்குமோ என்றுதான் நானும் அந்தச் சம்பவத்தை எண்ணி எண்ணிப் பார்க்கிறேன்.

★

முதல் நாள் மதுரம் என்னை யழைத்து, "நாளை கோமதியின் பெண்ணுக்கு வளைகாப்பு. இரண்டு பேருக்குச் சொல்லியாகி விட்டது. மூன்றாவதாக நீங்களும் போனால் ஏதோ கிடைக்கும் என்று சிபார்சு செய்தாளே என்று நான் அந்த வீட்டிற்குப் போனேன். கௌரியை என்னவோ வீட்டிலேயே விட்டுவிட்டுப் போயிருக்கலாம். அவ்வளவு பெரிய மனிதர்கள் வீட்டில் இந்த ஏழைக் குழந்தைக்கு ஒரு வயிறு சோறு கிடைப்பது பஞ்சமா என்று நினைத்து அழைத்துப் போய் விட்டேன்.

அந்த வீட்டிற்குள் சுற்றிச் சுற்றி வரும் பொழுது அங்கு நடப்பவைகளைக் கவனிக்



காமல் இருக்க முடியவில்லை. ஆடையாபரண அலங்காரங்களுடன் வரும் ஸ்திரீகளை வரவேற்று உபசரித்துக் கொண்டிருந்தாள் கோமதி. மற்றதெல்லாம் சம்பிரதாயத்தையொட்டி நடந்து கொண்டிருந்தது.

ஒரு புறத்தில் செல்வந்தர் வீட்டுச் சிறுமிகளுக்கென்று பிரத்யேகமாய் உயர்ந்த ரக வளையல்களாகப் பார்த்து அடுக்கப்பட்டது. மற்றொரு புறத்தில் சில சிறுமிகளுடன் கௌரியும் வாடிய முகத்துடன் நின்றுகொண்டிருப்பதைக் கண்டேன். இந்தக் கோலாகலத்தில அவளை யார் லக்ஷ்யம் செய்யப்போகிறார்கள்? அதே சமயத்தில் மதுரத்துடன் அங்கு வந்த பானுவை உடனே அழைத்துப் போய் அவள் கைநிறையக் கண்ணைக் கவரும் அழகிய வளையல்களாகப் பொறுக்கி அடுக்கிவிட்டாள் கோமதி. மதுரம் அவளைப்போல் உயர்ந்த அந்தஸ்திலிருப்பவளல்லவா?

பானுவை வீணாய்ச் சொல்லக்கூடாது. அவள் தங்கமான குழந்தை. அவளும் தாயற்ற குழந்தைதான். அதனால்தானோ என்னவோ அவளுக்குக் கௌரியிடம் ஒரு தனி அபிமானம். சோர்ந்து நிற்கும் கௌரியைப் பார்த்ததும் அவளைக் கோமதியிடம் அழைத்துப் போய் அவளுக்கும் வளையல் போடும்படி சிபார்சு செய்தாள். கோமதிக்குப் பானுவின் சொல்லைத் தட்ட முடியவில்லை, பாவம்! வளையற்காரனிடம் இருப்பதற்குள் மட்ட ரகமான வளையல்களில் ஒரு ஜோடியைக் கௌரிக்குப் போடும்படி உத்தரவிட்டாள். ஏழைக் குழந்தையிடம் இவ்வளவேனும் இரக்கம் காட்டினளே, அது பெரிதில்லையா?

பணக்காரர்களுக்கு மிக உயர்ந்ததாகவும் கதியற்ற ஏழைகளுக்குக் குறைந்ததாகவும் தான் வெகுமதி செய்வார்கள் என்பதை நம்மைப்போல் குழந்தைகளுக்கு அறிந்து கொள்ள முடிகிறதா? கிடைத்ததைக் கொண்டு திருப்தியடையாமல் பானுவின் வளையலுடன் தன் வளையலையும் ஒப்பிட்டுப் பார்த்து வீணில் கண் கலங்கியிருக்கிறாள் கௌரி!

நான் மறுபடியும் அந்தப் பக்கம் வந்த பொழுது, பானு கோமதியிடம், "கௌரிக்கும் என்னுடைய வளையலைப் போல் வேண்டுமாம்" என்று சொல்லிக் கொண்டிருந்தது காதில் பட்டது.

அதற்கு அவள், "அதெல்லாம் அவளுக்குப் போடக் கூடாது" என்றாள்.

இதற்குள் மதுரம், "நீ பேசாமல் இரு; இதைப் பற்றி அவளுடைய பர்த்தாக்கள் கவனித்துக் கொள்வார்கள்" என்று பானுவை அடக்கினாள்.

உடனே இருவரும் என்னிடம் ஓடி வந்தார்கள்.

கண்ணும் கண்ணீருமாய் நிற்கும் கௌரியின் குறையை நிவர்த்திக்கும் தன்மையில் நான் இருக்கிறேனா? அத்துடன் இந்தச் சமயத்தில் கௌரி என்னருகில் இருப்பதை வீட்டு எஜமானிகள் பார்த்துவிட்டால் கேட்கவே வேண்டாம். என்னிடம் அவநம்பிக்கை கொண்டு ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள்.

இதை யெல்லாம் எண்ணியபொழுது என் பொறுமை எங்கோ போய்விட்டது. அறியாக் குழந்தையிடம் பரிவு காட்டுவதற்குப் பதிலாக அவளை அங்கிருந்து அதட்டித் துரத்தினேன், பாவி! கோட்டானைப் போல் வயதாகிறதே யொழிய, புத்திதான் போய்விட்டதே! இதைப்பற்றிப் பின்னால் நினைத்து வருந்திக் கொண்டிருப்பதில் என்ன உபயோகம்?

'சாப்பாட்டிற்கு சோமாசி விட்டதென்று எல்லாம் துரிதமாய் நடந்துகொண்டிருந்தது. அப்பொழுது முன் கட்டில் ஏதோ பெரிய சத்தமா யிருந்ததால் என்னதான் நடக்கிறது பார்க்கலாமென்று போனேன். அங்கு நான் கண்ட காட்சி என்னைப் பிரமிக்கச் செய்துவிட்டது.

கௌரியின் கன்னத்தைப் பிடித்துத் திருகிக்கொண்டே கோமதி அவளை மிரட்டிக் கொண்டிருந்தாள். சுற்றிலுமிருந்த பெண்மணிகளோ குழந்தையை ஆளுக்கொரு விதமாய்த் திட்டி அட்டகாசம் செய்து கொண்டிருந்தார்கள். இந்த நிலையில் என்னைக் கண்டதும் அவர்களுடைய ஆத்திரம் உச்ச நிலையை அடைந்துவிட்டது



"உன் அருமைப் பேத்தியின் திருட்டுத்தனத்தை வந்து பார்! பானுவின் கையிலிருந்த வளையலையெல்லாம் கழற்றி உடைத்துவிட்டு விழிக்கிறதே, இந்தக் குரங்கு! இதற்கு என்ன சொல்கிறாய்?" என்று பாய்ந்து வந்தாள் கோமதி.

"ச்சீ! இந்த வாலை அழைத்துக் கொண்டு அயலிடத்திற்கு வர உனக்கு வெட்கமாயில்லையா?"

"இந்தத் திருட்டுக் கழுதைகளை உள்ளே விடவே கூடாது."

இப்படிப் பல குரல்கள் என் காதில் வந்து மோதிக் கொண்டிருந்தன.

கை விரலில் ரத்தம் கசிய இந்தக் குணவதிகளின் நடுவில் அகப்பட்டுக் கொண்டு என்னைப் பரிதாபத்துடன் பார்க்கும் கௌரியைக் கண்டதும் எனக்குப் பரம சங்கடமாய்த்தானிருந்தது. ஆனால், அந்தக் குழந்தைக்குப் பரிந்துகொண்டு இந்தச் செல்வச் சீமாட்டிகளின் மத்தியில் எதிர்த்துப் பேச எனக்குத் தைரியம் ஏது?

"ஏதோ அறியாக் குழந்தை செய்து விட்டது; மன்னித்து விடுங்கள்" என்று அவர்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டேன்.

"கௌரி கேட்கவே இல்லை. நானுகத்தான் என் வளையலைக் கழற்றி அவளைப் போட்டுக்கொள்ளச் சொன்னேன்!" என்று குழந்தை பானுகூடச் சொன்னாள். அதை அவர்கள் காதில் வாங்கிக் கொண்டால் தானே?

"இந்த அற்பத்துடன் பானுவை ஏன் சேரவிடுகிறாய்?" என்று மதுரத்தைக் கேட்டாள் ஒருத்தி.

"போகிறது, விடுங்கள்!" என்றாள் மதுரம்.

அவர்களா விடுவார்கள்? என்னையும் என்னைப் போன்றவர்களையும் பற்றி மனம் புண்படும்படி இழிவாகப் பேசவதென்றால், அவர்களுக்கு ரொம்ப ரொம்பப் பிடிக்குமே!

"காலை நாம் அவர்களை அண்டித்தானே பிழைக்க வேண்டும்?" என்று நான் வேதனையை வெளியே காட்டிக் கொள்ளாது வேலையைக் கவனித்தேன்.

எல்லாக் குழந்தைகளும் வந்து சாப்பிட உட்கார்ந்து விட்டார்கள். சுற்றுமுற்றும் பார்த்தேன்; கௌரியைக் காணவில்லை. அவள் வாயிற்புறத்தை விட்டு உள்ளே வரவே இல்லை என்பதை யறிந்ததும் என் மனம் பட்ட வேதனை கொஞ்சநஞ்ச மல்ல. அவளைத் தேற்றி யழைத்து வந்து ஒரு ஓரத்தில் எஞ்சியிருந்த இலையில் உட்கார வைத்தேன்.

நான் மறுபுறம் போய்த் திரும்புவதற்குள் அங்கு கௌரியைக் காணவில்லை. அந்த இடத்தில் ஒரு பெரிய மனுஷி உட்கார்ந்திருந்தாள். கண்ணீர் வழிய வாயிற்படி வழியே இறங்கிப் போகும் குழந்தையைக் கண்டதும், மறுபடியும் அவளை அழைத்து வரலாமென்று இரண்டடி எடுத்து வைத்தேன். அதற்குள், என் கழுத்தைப் பிடிக்க வந்துவிட்டாள் எஜமானியம்மாள். குமுறி வரும் துக்கத்தை அடக்கிக்கொண்டு திரும்பினேன்.

இப்படிக் கொஞ்சம்கூடத் துணிவற்ற என்னை ஏன்தான் அந்த பகவான் ஆட்டி வைத்து வேடிக்கை பார்க்கிறானே தெரியவில்லை.

எல்லாவற்றையும் விட, சாப்பிடும் பொழுது ஒரு சினிமாக் கதையைப் பற்றிக் கருணை ததும்பப் பேசிக் கொண்டிருந்தார்களே, அந்தப் புண்ணியவதிகள்!—அதை

நினைத்தால்தான் எனக்கு ஆற்ற முடிய வில்லை!

"நீ சொன்னாயே என்று நேற்று நான் அந்த சினிமாவுக்குப் போயிருந்தேன். அதைப் பார்த்தது முதல் மனம் சரியாகவே இல்லை. வாழ்வோரை வேண்டுமானால் பார்த்துக் கொண்டே இருக்கலாம். கஷ்டப் படுவோரைக் கண்ணால் பார்க்கவே கூடாது!" என்றாள் ஒருத்தி.

"அடியம்மா! ஒரு பிடி சோற்றுக்கு அந்தக் காலகண்டி என்ன பாடு படுத்து கிறான்! மனிதனென்றால் ஏதோ நம்மா லான தருமத்தைச் செய்வோமென்பது வேண்டாமோ! அந்தப் பெண்ணைப் பார்த் தால் பரம கன்றாவியா யிருந்தது!" என்றாள் மற்றொருத்தி.

"என்ன இருந்தாலும் பஞ்சத்திலே அடி பட்டு வந்திருப்பவர்களை இப்படியெல்லாம் வதைப்பது மகா பாவம்! ஏழைகளிடத்தில் கொஞ்சமேனும் இரக்கம் வேண்டாமோ? நல்ல வேளையாகக் கடைசியில் அந்தப் பெண் ஒரு பணக்காரப் பையனுக்கு வாழ்க் கைப்பட்டுச் சுகமாயிருக்கிறாளே, அதைச் சொல்லு!" என்று சுபகரமாய் முடித்தாள் கோமதி.

என்ன இரக்கம்! என்ன தயவு! கதை யிலே வரும் அந்தப் பஞ்சப் பெண்ணிற்கு, 'ஐயோ, பாவம்!' என்று இவ்வளவு அனு தாபம் காட்டும் இந்தத் தருமவதிகள் தான் சற்றுமுன் இலையில் உட்கார்ந்திருந்த ஏழைக் குழந்தையை எழுப்பித் துரத்தி விட்டார்கள்!

பெரிய இடத்து விஷயம்! என் போன்ற வர்கள் ஏன் என்று கேட்க முடியுமா?

★

மணி இரண்டுக்குமேல் ஆகிவிட்டது. குழந்தை என்னவானாளோ, அவளுக்குப் பசி பொறுக்காதே என்று மனம் அடித்துக் கொண்டது. குழந்தையைப் பட்டினி போட்டுவிட்டு நான் எப்படிச் சாப்பிடு வேன்? ஒரு வழியும் புரியாமல் திண் டாடியபொழுது அனுபவஸ்தியான என் கூட்டாளி தங்கம், "இப்படிப் பயந்து கொண்டிருந்தால் முடியாது. அவர்கள் பாட்டில் சொல்லிக் கொண்டிருக்கட்டு மென்று நாம் நம்முடைய விஷயங்களைக் கவனிக்க வேண்டியதுதான்!" என்று எனக்குப் புத்தி சொன்னாள். அதன் பின்பு தான் சற்றுத் துணிவுடன் அங்கிருந்து கிளம்பினேன்.

வரும்பொழுது வாயிற்புறத்திலிருந்த வளையற்காரனைப் பார்த்ததும் எனக்கே மனம் கேட்கவில்லை. அவனிடம் கௌரி ஆசைப்பட்ட அந்த வளையலின் விலை என்ன வென்று விசாரித்தேன். ஜதை முக்கால் ரூபாயாகுமென்று சொன்னான்.

போனால் போகிறது, இந்த வளையலை வாங்கிக்கொண்டு போனாலேனும் குழந்தை கொஞ்சம் சந்தோஷப்பட மாட்டாளா என்று தோன்றியது. திரும்பவும் உள்ளே நுழைந்தேன்.

தன் பெண்ணுக்குச் செய்து போட் டிருந்த வைர வளையலின் பிரதாபத்தை எடுத்துச் சிநேகிதிகளிடம் விஸ்தரித்துக் கொண்டிருந்த கோமதியிடம் எப்படியோ துணிந்து ஒரு ரூபாய் இருந்தால் தரும்படி கேட்டேன்.

"முழுநாளும் இன்னும் முடியவில்லை. அதற்குள் இப்படி ஒரு ரூபாயும் அரை ரூபாயும் கேட்டால் என்ன செய்வது?" என்று அலுத்துக் கொண்டாள் அவள்.

"கௌரிக்கு வளையல் வாங்கிக்கொண்டு போக வேண்டும். முக்கால் ரூபாயேனும் கொடுத்தால் பின்பு பிடித்துக்கொண்டு விடலாம்" என்று என் கருத்தை வெளி யிட்டு விட்டேன்.

"சரிதான், உங்களை யெல்லாம் நம்பவே கூடாதே! இப்படிப் பாதியிலே வீட்டிற்குப் போனால் என்ன செய்வது? வீட்டிற்குப் போய்த் தூங்கிவிட்டு வர முன் பணம் வேறு வேண்டுமோ? முழுநாளும் முடியாமல் ஏது வும் தரமுடியாது!" என்று சீறி விழுந்தாள் கோமதி.

"இது என்ன, மகா அற்பமா யிருக் கிறதே! வேலை முடிந்ததும் பணத்தை வாங்கிக் கொள்வதுதானே?" என்று அவளுக்கு ஒத்துப் பாடினாள் ஒரு சுமங்கலி.

"உன் அழகான பேத்திக்கு அந்த 'கில்ட் வளையல்' இல்லாமல்தான் குறையாக இருக் கிறதோ?" என்று கேட்டாள் மற்றொரு பாக்கியவதி.

தங்கமும் வைரமுமாய் இழைத்து வைத் திருந்தும் உருவாரத்தைப் போலிருக்கும் இவளுடைய அருமைப் பெண்ணின் அழகு கௌரிக்கு வருமா? அழுக்கற்ற ஒரு கந்தல் பாவாடையை உடுத்தினால்கூட

என் கௌரிக்கு எவ்வளவோ சோபிதமா யிருக்குமே!

அதற்குமேல் எனக்குத் தாங்கவில்லை. எங்கேனும் போய் 'கோ'வெனக் கதறி யழ வேண்டும் போலிருந்தது. சொத்து, சுகம் எல்லாம் போய்விட்டது. ஆனால் இந்தப் பாழும் ரோசம் மட்டும் என்னை விட்டுப் போகவில்லை!

"எனக்கு ஒன்றுமே கொடுக்க வேண் டாம். நீயே வைத்துக்கொண்டு மகாராஜியா யிரு!" என்று நினைத்துக் கொண்டே வெளியே வந்துவிட்டேன். நான் பதை பதைக்க வீட்டிற்கு வந்து பார்த்தபொழுது பசியோடு ஒரு மூலையில் சுருண்டு படுத் திருந்த கௌரியின் கோலம் என் நெஞ்சை அறுத்தது. அவளை வாரி எடுத்து அணைத் துக்கொண்டு, துக்கம் தீரக் கண்ணீர் சிந்து வதைத் தவிர என்னால் வேறு என்ன செய்ய முடியும்?

எல்லோரையும் இழந்து என்னையே தஞ்சமென்று நம்பி யிருக்கும் இந்தக் குழந்தைகளுக்காகத்தான் நான் எல்லா வற்றையும் சகித்துக் கொண்டிருக்கிறேன். எப்படியேனும் கௌரியின் ஆசை தீர அந்த வீணையை வாங்கிப் போட்டுவிட வேண்டு மென்றுதான் நினைத்திருக்கிறேன்.

பகவானே! இந்தச் சின்னஞ் சிறு குழந்தை கௌரிக்காகவேனும் கொஞ்சம் மனமிரங்கி இரக்கம் காட்ட மாட்டாயா?

---

# காலக்ஷேபம்

---

## யோசனை!

ஒரு பெரிய மனிதர் மோட்டாரில் போய்க் கொண்டிருந்தார். மேற்கொண்டு போக வேண்டிய வழி அவருக்குத் தெரியவில்லை. வண்டியை நிறுத்தி, அந்த வழியாய்ப் போன ஒரு சிறு பையனை நோக்கி, "தம்பி, இந்த ரோடு எங்கே போகிறது?" என்று கேட்டார்.

பையன் (திடுக்கிட்டு) :—என் பெயர் தம்பி தான். உங்களுக்கு எப்படித் தெரிந்தது?

பெரிய மனிதர் :—உத்தேசமாக ஊகித்துச் சொன்னேன்.

பையன் :—இந்த ரோடு எங்கே போகிறது என்பதையும் ஊகித்துக் கொள்ளுங்கள்!

## மறப்பதற்கா?

"பத்து ரூபாய் நீ என்னிடம் கடன் வாங்கிக் கொண்டாயே அதை அடியோடு மறந்து விட்டாயா?"

"இல்லை அப்பா, இல்லை! அதற்கு இன்னும் கொஞ்சம் 'டயம்' கொடு!"

## ஊகம் சரிதான்!

பிள்ளை :—குதிரைப் பந்தயத்துக்கு அப்பா போய்விட்டாரா, அம்மா?

அம்மாள் :—அவர் குதிரைப் பந்தயத்துக்குப் போனது உனக்கு எப்படிடா தெரிந்தது? நீதான் தூங்கிக் கொண்டிருந்தாயே?

பிள்ளை :—அலமாரியில் நான் வைத்திருந்த மூக்கால் ரூபாயைக் காணோம், அம்மா!

## தாமதம்தான்

மனைவி :—அம்மா நல்ல வேளையாக இன்று காலையில் காயம் படாமல் தப்பினாள்.

கணவன் :—ஏன்? என்ன நடந்தது?

மனைவி :—சுவரில் மாட்டியிருந்த கடிகாரம் விழுந்துவிட்டது. ஒரு க்ஷணம் முன்னால் விழுந்திருந்தால் அது அம்மாவின் தலையில் விழுந்திருக்கும்.

கணவன் :—நான்தான் சொல்லிக்கொண்டே யிருக்கிறேனே, கடிகாரம் கொஞ்சம் மெது வாய்ப் போகிறது என்று?

## நல்ல சமயம்

"வித்வான் சேஷாத்ரி சர்மாவுக்கு இரண்டு நாளாக உடம்பு சுகமில்லை ஜலதோஷத்தினால் தொண்டை கட்டிக் கொண்டிருப்பதால் அவ ரால் பேச முடியவில்லை."

"அடேடே! அப்படியா? ரொம்ப நாளாக அவரோடு இரண்டு வார்த்தை பேசவேண்டும் என்றிருந்தேன். இன்றைக்காவது போய்ப் பேசிவிட்டு வருகிறேன்!"

## ஒரு பலன்!

வைத்தியர் :—இந்த வியாதிக்கு உள்ளிப் பூண்டு ரொம்ப நல்லது என்று சொன் னேனே, சாப்பிட்டுப் பார்த்ததில் ஏதாவது பலன் இருந்ததா?

வியாதியஸ்தர் :—ஒரு பலன் இருந்தது. பல், டிராம் இவைகளில் போகிறபோது நம்ம பக்கத்தில் ஒருவரும் அண்டுவது கிடையாது!

# ஒற்றுமைச் சங்கம்

ராஜீ

ஒரு நாய் தன் கழுத்தில் டமாரத்தைக் கட்டி அடித்துக்கொண்டு பின்வருமாறு விளம்பரப்படுத்திற்று:

"இதனால் எல்லா நாய்களுக்கும் தெரிவித்துக் கொள்வது என்னவென்றால், நாளை மாலை ஆற்றங் கரையில் ஒரு கூட்டம் கூடும். அந்தக் கூட்டத்திற்கு இவ்வூர் ஸப் கலெக்டர் வீட்டுக் கறுப்பு நாய் தலைமை வகிக்கும். 'நாய்களின் ஒற்றுமை' என்பதைப் பற்றிப் பல நாய்கள் பேசும். எல்லா நாய்களையும் அவசியம் வரும்படி கேட்டுக் கொள்ளப் படுகிறது!"

அதன்படியே ஆற்றங் கரையில் அன்று பிரமாதமான கூட்டமாயிருந்தது. குறிப்பிட்ட மணிக்கு ஸப் கலெக்டர் வீட்டிலிருக்கும் கறுப்பு நாய் கூட்டத்திற்கு வந்தது. அதை அங்கு கூடியிருந்த நாய்கள் யாவும் பலத்த கரகோஷம் செய்து வரவேற்றன. பலத்த ஆரவாரத்துக்கு இடையே கறுப்பு நாய் எழுந்து பேச ஆரம்பித்தது.

"சகோதர, சகோதரிகளே! நீங்கள் யாவரும் ஒன்று கூடியிருப்பதைப் பார்க்க எனக்கு மிகவும் சந்தோஷம். வீட்டில் வளர்க்கப்படும் நாய்களும், உயர்ந்த ஜாதி நாய்களும், தெருவில் எச்சில் இலை பொறுக்கும் நாய்களும், வேட்டை நாய்களும் ஒன்று சேர்ந்து வித்தியாசமில்லாமல் இங்கு கூடியிருப்பதிலிருந்தே நமக்குள் ஒற்றுமை சீக்கிரம் ஏற்பட்டு விடும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனாலும் ஏதாவது ஒரு அந்நிய நாய் நாம் வசிக்கும் தெருவுக்குள் வந்து விட்டால் நாம் குலைத்துக் குலைத்து அந்த வேற்று நாயை விரட்டுகிறோம். ஒரு நாய் எச்சில் இலையைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பொழுது மற்றொரு நாய் அங்கு வர நேர்ந்தால், அந்த இரண்டு நாய்களுக்குள் பிரமாதமான சண்டை ஏற்பட்டு விடுகிறது. இது மிகவும் கேவலம்.

"நமக்குக் கிடைக்கும் ஆகாரத்தைப் பிறருக்குப் பங்கிட்டுக் கொடுப்பதுதான் உத்தம குணமாகும். துரை வீட்டில் வளர்க்கப்படும் நாய் அடிக்கடி கார்களில் போவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். ஏன், நான் கூட ஸப் கலெக்டர் துரையுடன் அடிக்கடி மோட்டார் காரில் சவாரி செய்கிறேன். அதனால் தெருவில் ஓடும் நாய்களை விட நான் உயர்ந்தவன் என்று சொல்லிக் கொள்ள முடியுமா? (கரகோஷம்) நாம் யாவரும் சமம். நமக்குள் சண்டைகளே வரக்கூடாது! ஒருவர்மேல் ஒருவர் அன்பு பாராட்ட வேண்டும். அப்படிச் செய்தோமானால் நமக்குள் சீக்கிரம் ஒற்றுமை ஏற்பட்டுவிடும்" என்று சொல்லிவிட்டுக் கறுப்பு நாய் உட்கார்ந்தது. அதற்கு அடுத்தபடியாக ஓர் உயர்ந்த வேட்டை நாய் எழுந்து, "நான் கறுப்பு நாய் சொல்லியவற்றை ஆமோதிக்கிறேன். அற்ப விஷயங்களுக்காக நாம் இனிமேல் சண்டை போடக் கூடாது" என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லிற்று.

சபையில் பிரமாதமான கரகோஷம். அப்பொழுது ஒரு வயோதிக நாய் எழுந்திருந்து மிகவும் மெலிவிய குரலில், "சபையோர்களே! கறுப்பு



நாயும் வேட்டை நாயும் சொல்லுவ தெல்லாம் சரிதான். ஆனால் அவை இரண்டும் சொல்லியபடி நடப்பது தான் சிரமம். என்னுடைய அனுபவத்திலிருந்து சொல்லுகிறேன். முக்கியமாக, இப்பொழுது பிரசங்கம் செய்த கறுப்பு நாயும் வேட்டை நாயும் ஒற்றுமையாக இருப்பதுகூட முடியாத காரியம்தான்!" என்று சொல்லிற்று.



அவ்வளவுதான்; "உட்காரு! உட்காரு!" என்று பல குரல்கள் எழுந்தன. வயோதிக நாய் பேசாமல் உட்கார்ந்து விட்டது.

உடனே அங்கு கூடியிருந்த நாய்களெல்லாம் ஒன்று சேர்ந்து, தங்களுக்குள் "நாய்களின் ஒற்றுமைச் சங்கம்" என்று ஒரு சங்கத்தை ஆரம்பித்தன. அதற்குக் கறுப்பு நாயைத் தலைவராகவும், வேட்டை நாயை உப தலைவராகவும் தேர்ந்தெடுத்தன.

கூட்டம் நடந்த மூன்றாவது நாள் கறுப்புநாயும் வேட்டை நாயும் தனியாக உட்கார்ந்து, ஒற்றுமைச் சங்கத்தை எப்படி விருத்திக்குக் கொண்டு வருவது என்பதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தன. அந்தச் சமயத்தில் அவைகளின் எதிரே ஏதோ ஒன்று 'தொப்'பென்று விழுந்தது. அது ஓர் எலும்புத் துண்டு என்று தெரிந்ததும் கறுப்பு நாயும் வேட்டை நாயும் ஒரே சமயத்தில் அந்தத் துண்டின்மீது பாய்ந்தன. எலும்புத் துண்டின் ஒரு பாகத்தைக் கறுப்பு நாய் கௌவிக் கொண்டது. மற்றொரு பாகத்தை வேட்டை நாய் கௌவிக் கொண்டு, "இந்த எலும்பு என்னைச் சேர்ந்தது! நான்தான் முதலில் கௌவினேன்!" என்று கோபத்தினால் பல்லைக் காட்டிக் கொண்டே சொல்லிற்று. "அதெல்லாம் முடியாது. நான்தான் முதலில் கௌவினேன். இந்த எலும்புத் துண்டு என்னைச் சேர்ந்ததுதான்!" என்று கறுப்பு நாய் உறுமிற்று. சிறிது நேரத்திற்கெல்லாம் கறுப்பு நாய்க்கும் வேட்டை நாய்க்கும் பிரமாதமான சண்டை வந்து விட்டது. இரண்டு நாய்களுக்கும் உடம்பில் பல காயங்கள் ஏற்பட்டன.

அந்தச் சமயத்தில் அவற்றின் எதிரே வயோதிக நாய் வந்து நின்று, "அட நாய்களே, உங்கள் ஒற்றுமையைப் பரிசோதிக்கவே நான் மறைவிலிருந்து ஓர் எலும்புத் துண்டை எடுத்துப் போட்டேன். இப்பொழுது தெரிந்து விட்டதல்லவா, உங்கள் ஒற்றுமை!" என்று சொல்லிற்று. கறுப்பு நாயும் வேட்டை நாயும் அவமானத்தினால் தலை குனிந்து நின்றன.

## போலீஸ் உதவி!





நிலா வெளிச்சத்தில் அழகான பெரிய இந்திய ரோஜா மலர்கள் அவையின் மயக்கும் நறுமணத்தால் காற்றை நிரப்புகின்றன — அவை விநோலியா ஒயிட் ரோஸின் என்னென்ன எண்ணங்களை விளைவிக்கின்றன! உங்கள் அழகை அதிகரிக்கச் செய்ய உங்கள் <u>இஷ்டத்திற்குரிய</u> இச்சோப்பைவிட உத்தமமானதோ தகுதியானதோ வேறு கிடையாது. மிருதுவான நுரையைத் தரும் விநோலியா மிகவும் மெல்லிய சருமத்தை சுகமாகச் சுத்தம் செய்கிறது . . . மேலும், மணமுள்ள அதன் நுரை உங்களைச் சுற்றிலும் மனோஹர பரிமளத்தைப் பரவச் செய்கிறது.




# விநோலியா ஒயிட் ரோஸ் சோப்

VWR. 21-23 TM VINOLIA COMPANY LIMITED, LONDON, ENGLAND

# மைதிலி ரங்கநாதன்

ஸோமாஸ்



ரங்கநாதனுக்கு ஒரு மாதம் வரையில் கிராம வாழ்க்கை இனிமையாயிருந்தது. வர வர ஒரு நாள் போவது மிகவும் பிரயாசையாயிருந்தது.

இந்தச் சமயத்தில்தான் அந்த ரிடையர்டு ஜில்லா கலெக்டர் ஆராவமுத ஐயங்கார் அந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தார். அவர் வந்த ஒரு வாரத்துக்கெல்லாம் ரங்கநாதனுக்குக் கிராமமே புத்துணர்ச்சியுடன் விளங்குவதாகத் தோன்றியது. ஆற்றுக்குப் போகும் வழியில் இருந்த மாந்தோப்பில் கூவின குயில்கள் இப்பொழுது அழகிய காதல் கீதத்தை இசைப்பதாக அவனுக்குத் தோன்றியது. ஆற்று ஜலம் போகும் வேகத்தில் உண்டாகும் சலசலப்புச் சத்தம் முன்பு அவனுக்கு அர்த்தமற்றதாகத் தோன்றும். இப்பொழுது அதே சலசலப்புச் சத்தத்தில் அவன் ஆசைக் காதலின் அன்பு மொழிகளைக் கேட்க முடிந்தது.

ரங்கநாதனின் இந்தத் திடீர் மாறுதலுக்குக் காரணம் ரிடையர்டு கலெக்டர் ஆராவமுத ஐயங்கார் வந்தது மட்டுமல்ல; அவருடைய அருமை மகள் மைதிலியும் வந்திருந்ததுதான்.

ரிடையர்டு கலெக்டர் ஆராவமுத ஐயங்காரின் நட்பைப் பெறுவது ரங்கநாதனுக்கு அப்படியொன்றும் பிரமாதமான காரியமாயில்லை. அந்தக் கிராமத்தில் புதிதாக வீடு வாங்கிக்கொண்டு குடியேறிய ஆராவமுத ஐயங்காருக்கு ரங்கநாதனின் சகாயம் ரொம்ப அவசியமாயிருந்தது. குடியிருப்பு வசதிகளையெல்லாம் அவன்தான் செய்து கொடுத்தான்.

ரங்கநாதன் மாலை வேளையில் ஆற்றங்கரைக்குச் செல்லத் தவறமாட்டான். அவனோடு கூடவே மைதிலியின் நினைவும் தொடரும். அன்று ஆற்றங்கரை மாமரத்தடியில் அமர்ந்து ரங்கநாதன் சிந்தனை அலைகளில் தத்தளித்துக் கொண்டிருந்தான்.

இடுப்பில் குடம் எடுத்துக்கொண்டு வருவது யார்? மைதிலியா? ஆமாம், மைதிலிதான்! அவள் நடையிலிருக்கும் ஒய்யாரம் அவன் சந்தேகத்தை நீக்கி விட்டது. ஆற்றங்கரைப் படித் துறையில் அழகு பொங்க அவள் இறங்குவதை அவன் கவனித்துக் கொண்டிருந்தான்.

என்ன! ஆற்று ஜலத்தில் குடம் அடித்துக் கொண்டு போகிறதே! அவ்வளவுதான். ரங்கநாதன் அதைப்பார்த்துக் கொண்டு சும்மா இருந்துவிடவில்லை. உடனே ஆற்று வெள்ளத்தில் குதித்து அந்தக் குடத்தை எடுத்து வந்து மைதிலியின் முன்னால் வைத்துவிட்டுப் போர் வீரனைப்போல் தலை நிமிர்ந்து கம்பீரமாய் நின்றான். குடத்தை அவளிடம் தரும்போது அவள் கரம் அவனைத் தீண்டியது. அம்மம்மா! அது என்ன அவனை அப்படி உலுக்கிவிட்டதே!

மரத்தடியிலிருந்த ரங்கநாதன் திடீரென்று விழித்துக் கொண்டான். அவனுக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது. அப்போது நடந்த சம்பவம் இம்மியளவுகூட உண்மையல்லவென்றும், தான் கண்டது அவ்வளவும் பகற்கனவுதான் என்றும் தெரிந்து கொண்டான்.

இந்த மனப் பிரமைக்குக் காரணம் இரண்டு என்பது ரங்கநாதனுக்குப் பளிச்சென்று தெரிந்து போயிற்று. ஒன்று, தான் சதாகாலமும் மைதிலியின் ஞாபகமாகவே இருப்பது. இரண்டாவது காரணம், சமீபத்தில் ஒரு பத்திரிகையில் பிரசுரமான ஒரு காதல் கதையைப் படித்ததன் விளைவு என்று அறிந்தான். இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவன் மனம், 'காலமெல்லாம் அவள் காதலை யெண்ணி' உருகிற்று.

ரங்கநாதன் தன் இருதயம் முழுவதையும் மைதிலிக்கே விட்டிருந்தது என்னவோ உண்மை. ஆனால் மைதிலியின் இருதயத்தில் தனக்கு இடம் கொஞ்சமாவது இருக்கிறதா என்னும் விஷயந்தான் ரங்கநாதனுக்குப் புதிராயிருந்தது.

இப்போது சென்னையில் வீடு தேடி ஜனங்கள் அலைவதைப் போல் ரங்க

நாதன் மைதிலியின் இருதயத்தில் இடம் தேடிக்கொண்டு அலையவில்லை. அவள் இருதயத்தில் அவனுக்கு நிறைய இடம் இருக்கிறது என்பது ஒரு நாள் நிதர்சனமாக வெளியாயிற்று.

அன்று ரங்கநாதன் போயிருந்த சமயம் ஆராவமுத ஐயங்கார் வீட்டில் இல்லை.

"வாருங்கள்! அப்பா வெளியே போயிருக்கிறார். வந்து விடுவார்!" என்ற தேன் குரலைக் கேட்டு ரங்கநாதன் மெய்ம்மறந்து போய் வாசற்புறத்து அறையில் அமர்ந்து கொண்டான். அப்போது மேஜையின் மேல் இருந்த ஒரு நோட் புத்தகம் அவன் கவனத்தை இழுத்தது. உடனே ஆவலோடு அதை எடுத்துப் பார்த்தான்.

என்ன இது! நோட் புத்தகத்தில் 'மைதிலி ரங்கநாதன்' என்று எழுதியிருக்கிறதே! அவன் மேல் அவளும் காதல் கொண்டிருக்கிறாள் என்பதற்கு இன்னும் என்ன சந்தேகம்?

ரங்கநாதனுக்கு மெய் சிலிர்த்தது. அந்த ஆனந்தத்தை ஆராவமுத ஐயங்காருடன் சாரமற்ற பேச்சுப் பேசிக் கெடுத்துக் கொள்ள அவன் விரும்பவில்லை. அவர் வருவதற்குள் வீட்டுக்குப் போய் விட்டான்.

மறுநாள் ரங்கநாதன் ஆராவமுத ஐயங்கார் வீட்டுக்குப் போனபோது உள்ளே யாரோ அவருடன் பேசிக் கொண்டிருப்பது காதில் விழுந்தது.

"மைதிலிக்குக் கல்யாணத்தை இந்த மாசமே நடத்தி விடுவதாக உத்தேசம் செய்திருக்கிறேன்!"

"அப்படியா? வரன் எங்கே பார்த்திருக்கிறீர்கள்?"

"நம்ம ரங்கநாதனுக்கே கொடுத்து விடலாம் என்று பார்க்கிறேன். குழந்தைக்கும் அவனிடம் ரொம்பப் பிரியம் இருக்கிறது!"

அதற்குமேல் ஆராவமுத ஐயங்கார் பேச்சைக் கேட்க அவன் விரும்பவில்லை. மேலும் அந்தச் சமயத்தில் அவன் அங்கே வந்திருப்பது தெரிந்தால் அவ்வளவு சுகப்படாது என்று தீர்மானித்துக் கொண்டு மெதுவாக நழுவிவிட்டான்.

ஒரு வாரம் வரையில் ரங்கநாதன் ஆராவமுத ஐயங்கார் வீட்டுப் பக்கம் தலை காட்டாமலிருந்தான். பல்வலியால் அவஸ்தைப்படுகிறவன் மாதிரி வீட்டில் யாருடனும் பேசாமல் இருந்தான்.

அன்று ஆராவமுத ஐயங்காரிடமிருந்து ரங்கநாதனைக் கையோடு அழைத்து வரும்படி அவர் சொன்னதாக ஓர் ஆள் வந்து அவனிடம் சொன்னான்.

உடனே சந்தோஷத்துடன் ரங்கநாதன் புறப்பட்டான். அதற்காகத் தானே அவன் காத்திருந்தான்?

"வா அப்பா, ரங்கநாதன்! என்ன பத்து நாட்களாக ஆளையே காணோம்! உன்னைத்தானே தினம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்? நீயாக வருகிற வழியாயில்லை. அதற்காகத்தான் கூப்பிட்டனுப்பினேன். என் தங்கையின் பிள்ளை ரங்கநாதன் இன்று மாலை வண்டியில் வருகிறான். நீ கொஞ்சம் ஸ்டேஷனுக்குப் போய் அவனை அழைத்து வந்துவிட வேண்டும். கார் போகிறது. முக்கியமான விஷயம் ஒன்று. வருகிற திங்கட்கிழமை மைதிலிக்கு விவாக முகூர்த்தம் நிச்சயம் செய்திருக்கிறேன். நான் ஊருக்குப் புதியவன். நீதான் எல்லாவற்றையும் பார்த்துக்கொள்ள வேண்டும். இந்தா, முகூர்த்தப் பத்திரிகை!" என்று சொல்லி அவன் கையில் ஒரு பத்திரிகையைக் கொடுத்தார் ஆராவமுத ஐயங்கார்.

பத்திரிகையின் மேற் பக்கத்தில் "**விவாகம்—மைதிலி ரங்கநாதன்**" என்று கொட்டை எழுத்தில் காணப்பட்டது.

ரங்கநாதனின் குரல் பதிலுக்கு ஒன்றும் பேச முடியாமல் கம்மிவிட்டது.



# 1946-ம் வருஷத்து "கல்கி" சிறு கதைப் போட்டி-ரூ. 1000

## முதல் பரிசு ரூ. 500 ; ஐந்து பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ. 100

●

1. இந்தப் போட்டிக்கு அனுப்பும் கதைகள், தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட புதுக் கற்பனைகளாக இருக்க வேண்டும்.

2. கதையின் நீளம் "கல்கி"யில் ஐந்து பக்கம் முதல் பன்னிரண்டு பக்கத்துக்குள் அடங்குவதாயிருக்க வேண்டும்.

3. ஒரே ஆசிரியர் இரண்டு கதைகள் அனுப்பி வைக்கலாம். அதற்குமேல் அனுப்பக் கூடாது.

4. சென்ற 1945-ம் வருஷத்துப் போட்டிக்கு அனுப்பிப் பரிசு பெறாத கதைகளைத் திரும்பவும் அனுப்பக் கூடாது. அம்மாதிரி கதைகள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படமாட்டா.

5. 1946-ம் வருஷம் செப்டம்பர் 30உக்குள் போட்டிக் கதைகள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். கவரின்மேல் "சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

6. எல்லாவற்றிலும் சிறந்ததென்று பஞ்சாயத்தார் கருதுகிற கதைக்கு முதல் பரிசு ரூ. 500-ம், அடுத்தபடியான ஐந்து கதைகளுக்கு ஒவ்வொன்றுக்கு ரூ. 100 விதமும் அளிக்கப்படும். பரிசு பெற்ற கதைகளின் 'காபிரைட்' உரிமை "கல்கி" காரியாலயத்தைச் சேர்ந்தது.

7. பரிசு பெறாத கதைகளில் பிரசுரத்துக்குத் தகுதியான கதைகள் பிரசுரத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும். அவற்றுக்கு ஆசிரியர் உசிதப்படி சன்மானம் வழங்கப்படும்.

8. முதற் பரிசு பெற எந்தக் கதையும் தகுதியற்றதென்று பஞ்சாயத்தார் கருதினால், பரிசுத் தொகை பஞ்சாயத்தாரின் உசிதம்போல் பிரித்துக் கொடுக்கப்படும்.

9. இந்தப் போட்டி சம்பந்தமான விதிகளை மாற்றவும் திருத்தவும் "கல்கி" ஆசிரியருக்கு உரிமை உண்டு.

10. சந்தேகம் ஏற்படும் எந்த விஷயத்திலும், "கல்கி" ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

பஞ்சாயத்தார் : 1. ஸ்ரீ பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை எம்.ஏ., பி.எல்., ஆசிரியர், தமிழ் "நேஷனல்", தியாகராஜ நகர். 2. ஸ்ரீ தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் எம்.ஏ., திருநெல்வேலி. 3. ஸ்ரீ என். ராமஸ்வாமி, (அமிலன்) ஆசிரியர், "மாலதி", தியாகராயநகர். 4. ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார், பி.ஏ., பி.எல்., குற்றாலம். 5. ஆசிரியர், "கல்கி", சென்னை.

**சிறு கதைப் போட்டி முடிவு தேதி 30—9—46**

**மானேஜர், "கல்கி" கீழ்ப்பாக்கம், சென்னை**

---

## திருச்சி நேஷனல் காலேஜ் வைரவிழா கொண்டாட்ட நிதிக்காக



**ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி**

உதவும் சங்கீதக் கச்சேரி

ஞாயிற்றுக்கிழமை

**20 - 10 - 1946 மாலை 6 - மணிக்கு**

பிரத்யேகமாக நேஷனல் காலேஜில் அமைக்கப்பட்டுள்ள பந்தலில்

சங்கீத ரத்ன

| | |
|---|---|
| மைசூர் டி. சௌடய்யா | - பிடில் |
| கல்பாத்தி ராமனுதன் | - மிருதங்கம் |
| கோயமுத்தூர் ராஜப்பய்யர் | - கஞ்சிரா |
| ஆலங்குடி ராமச்சந்திரன் | - கடம் |

டிக்கட்டுகள்:—ஆதரவாளர் ரூ. 250/- ரூ. 100/- ரூ. 25/- ரூ. 10/-

எல். என். எஸ். மணி, காரியதரிசி,
வைரவிழாக் கமிட்டி.

# தமிழில் பிறமொழி

**எல். கிருஷ்ணசாமி பாரதி எம்.ஏ. பி.எல்.**

**ப**த்திரிகைகளுக்குச் சர்வ வல்லமையும உண்டு. புதிய கருத்துக்களைப் புகுத்துவதும், அவைகளுக்கு ஏற்பப் புதிய சொற்களையும், சொற்றொடர்களையும் தோற்றுவிப்பதும் அவைகளின் சிறப்புரிமை.

ஆனால், பெரும்பாலும் ஆங்கிலத்தில் வரும் செய்திகளைத் தமிழில் ஆக்க வேண்டிய பொறுப்பு வாய்ந்த தமிழ்ப் பத்திரிகையாளர்கள் கவனிக்க வேண்டியனவும் சில உ.

பிறமொழிச் சொற்களை அறவே விலக்க வேண்டும் என்ற தனித்தமிழ்த் "தூய்மையாளர்" கட்சி எனக்கு உடன்பாடில்லை.

ஆரியம் - தமிழ் என்ற இருபெரு நாகரிகங்களும் இன்று இரண்டறக் கலந்துள்ளது, பாலும் நீரும் கலந்ததுபோல. இந்த நாகரிகங்களின் திருமணத்தை, 'ஆயிரம் வருடத்துப் பயிர்' என்று சொல்லுவதும் பொருந்தும். இன்று இதனைப் பிரிக்க முயலுவது ஆராய்ச்சிக்குப் பயன்படலாம். ஆனால் உலகியல் வாழ்க்கைக்கு உகந்தது இல்லை; அவசியமும் இல்லை.

எனவே, இவ்விரு பெரு நாகரிகங்களின் கலப்பினால், வடமொழிச் சொற்கள், தமிழ் மொழியில் ஓரளவு கலந்து வழங்கப்படுவது இயற்கையேயாகும். ஆனால் தமிழ் மரபுக்கு அறவே புறம்பான ஆங்கிலச் சொற்கள் தமிழில் கலப்பது ஒரு சிறிதும் நல்லதல்ல என்பதே என் கருத்து.

வடமொழிச் சொற்களைத் தமிழில் எடுத்து ஆளும்போது, ஆழ்ந்த கவனம் செலுத்த வேண்டுவது மிகவும் அவசியமாகும். பத்திரிகையாளர்களுக்கு இதில் பொறுப்பு அதிகம். பிறமொழிச் சொற்களுக்கு, அம்மொழியிற் குறிப்பிட்ட பொருளுண்டு. அதனை அறவே புறக்கணிக்க முடியாது. அப்பொருளை அறிந்து கொள்ளாமல், அச்சொற்களைத் தமிழில் எடுத்து ஆளுவது தவறானது, நகைப்பிற்கு இடமாகும்; விபரீதமானது.

இத்தகைய விபரீதத் தவறு ஒன்று தமிழ் நாட்டுப் பத்திரிகை உலகில் சில காலமாய் நிகழ்ந்து வருகிறது. கவனக் குறைவே இதற்குக் காரணம்; ஆகவே பத்திரிகையாளர் கவனத்தை இழுக்கவே, இதை எழுதலானேன்.

'நிவாரணம்,' என்பது ஒரு வடமொழிச் சொல். இதன்பொருள், அடியோடு ஒழித்தல், மிச்சமின்றி நீக்குதல் என்பதாகும். இச்சொல் அநேகமாகப் பிறிதொரு சொல்லோடு சேர்ந்து தொடர் மொழியாகவே வரும். சர்வ ரோக நிவாரண சஞ்சீவி மருந்து - எல்லா நோய்களையும் அடியோடு ஒழிக்கும் மருந்து என்று பொருள். பஞ்ச நிவாரணம் - பஞ்சத்தை நீக்குதல்.

இனித் தமிழ்ப் பத்திரிகை உலகில், முக்கியமாக தினசரிகளில், "அரசியல் கைதிகள் குடும்ப நிவாரணத்திற்குத் தாராளமாக உதவுங்கள்!" என்று பார்க்கிறோம். அரசியல் கைதிகளின் குடும்ப அடியோடு ஒழிப்பு நிதிக்கு உதவுங்கள்! என்று ஆகும். இது கர்ண கொடூரமல்லவா? அமங்கலமல்லவா? இப்படியே, 'இந்திய தேசிய ராணுவ நிவாரண நிதி' என்று எழுதப் பெறுகிறது. ஆனால் சில தினங்களுக்கு முன் வானொலியிலும், இந்த 'நிவாரணச்' சொல் என் சிந்தையைக் கலக்கியது. "கல்கத்தா கலக அகதி நிவாரணம்" என்ற வானொலி என் காதில் நாராசம் ஊற்றியது போலிருந்தது.

எனவே, இனியேனும் பத்திரிகையாளரும், வானொலியாரும், "நிவாரண"ச் சொல்லை இவ்வாறு எடுத்து ஆளுவதை நிறுத்துவார்களாக. "நிவாரண"ச் சொல்லில் மோகமிருந்தால், "கஷ்டத்"தையும் சேர்த்துக் 'கஷ்ட நிவாரணம்' என்று எழுதுவதே முறையாகும்.

பொருளை ஊன்றிக் கவனியாது, பிறமொழிகளைக் கையாளுவதில் ஏற்படும் விபரீதத்திற்கு இது ஒரு உதாரணம்.

மேற்கண்ட இடங்களில் 'நிவாரணம்' என்ற சொல்லுக்குப் பதிலாக 'உதவி' என்ற சொல் பொருந்தும்; எளிமையோடு அழகும் திகழும். அரசியல் கைதிகளின் குடும்ப உதவி நிதி; இ. தே. ரா. உதவி நிதி; கல்கத்தா அகதி உதவி நிதி; — என்று

சொல்லலாம். இந்த 'உதவி' அழகாயில்லையா? இவ்வாறு அழகிய 'உதவி' இருக்க, ஒழிக்கும் 'நிவாரணப்' பிரயோகம் எதற்கு?

இந்தப் பூண்டற ஒழிக்கும் பொருள் கொண்டுள்ள 'நிவாரண'ச் சொல் பத்திரிகைகளில் எவ்வாறு நுழைந்தது என்பது சுவையான விஷயம். "Political Prisoner's Family Relief fund" - என்ற ஆங்கிலத் தொடரை, "அரசியல் கைதிகள் குடும்ப கஷ்ட நிவாரண நிதி" என்று மொழி பெயர்த்திருக்கவேண்டும். 'Relief' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு, 'கஷ்ட நிவாரணம்,' என்ற வடமொழிச் சொற்றொடர் சரியான மொழி பெயர்ப்பே. கஷ்ட நிவாரணம் என்றால் கஷ்டத்தை முழுதும் ஒழிப்பது என்ற பொருள்.

ஆனால், எப்படியோ, இந்தத் தொடரில் உள்ள 'கஷ்டம்' என்ற அவசியமான சொல் நீக்கப்பட்டு, 'நிவாரணம்' மட்டும் தனியே நிற்கவே, நினையாத, விரும்பாத, வேண்டாத, விபரீதப் பொருள் விளைக்கலாயிற்று. இப்பிழையும், இத்தகையனவும், இனியேனும் சோராதிருக்குமாக! பத்திரிகையாளர்களும், வானொலியாளர்களும் கவனித்திடுக.

* * *

# ஏட் ரங்கசாமி

**ரி. ஆர். ஆர்.**

போலீசாரிடையே உண்டான குதூகலம் சொல்லி முடியாது. இருபது வருஷங்களாகப் பல திருட்டுக்களும் கொள்ளைகளும் சேலம் ஜில்லாவின் பல பாகங்களில் செய்துகொண்டு வந்த குறவன் செங்கோடனின் இரகசிய மலை வாசஸ்தலம் கண்டு பிடிக்கப்பட்டு விட்டதுதான் அதற்குக் காரணம். குறவன் லேசுப்பட்டவனல்ல; துப்பாக்கிக் குண்டுக்கும் தப்பி ஓடக் கூடியவன்; வேஷம் போடுவதில் மகா கெட்டிக்காரன்.

இதற்காக அனுப்பப்பட்ட திறமை வாய்ந்த கான்ஸ்டேபில்களுடன் ஏட் ரங்கசாமியும் அனுப்பப்பட்டிருந்தான். ஆபரேஷனால் கண் பார்வையை இழந்து விட்ட, அறுபது வயதான ரங்கசாமி அந்தக் கூட்டத்துக்கு ஒரு திருஷ்டி பரிகாரமாக இருந்தான். சிறு வயதில் செங்கோடனுடன் விளையாடிப் பழகினவன் என்று ஒருவேளை அவன் அனுப்பப்பட்டிருக்கலாம்.

"நீங்கள் நினைத்தபடி செங்கோடன் சாராயத்தைக் குடித்துவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான். நான் தொந்தரவில்லாமல் அவனுக்கு விலங்கு போட்டு விட்டேன். இப்போது நான் ஸ்டேஷனுக்குப் போகவேண்டும். நீங்கள் அவனை லாரியில் அழைத்துக் கொண்டு வாருங்கள்!" என்று சொல்லிவிட்டு, மோட்டார் வண்டியில் ஏறினார் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர். அவருடைய உடையைப் பார்த்தால் அவர் புது தாலுகா இன்ஸ்பெக்டராகத்தான் இருக்கவேண்டுமென்று மற்ற கான்ஸ்டேபில்களுக்குத் தோன்றிற்று.

ஆனால், ஏட் ரங்கசாமியோ, "என்ன எஜமான்! சௌக்கியமா?" என்று கேட்டுக் கொண்டே புது இன்ஸ்பெக்டரை அணுகினான். "சௌக்கியந்தான் ரங்கசாமி......!" என்று சொல்லிக் கொண்டே வண்டியை வெகு விரைவாக 'ஸ்டார்ட்' செய்தார் இன்ஸ்பெக்டர்.

உடனே ரங்கசாமி மற்ற கான்ஸ்டேபில்களைப் பார்த்து, "நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்! இவன் இன்ஸ்பெக்டரல்ல; செங்கோடக் குறவன்!" என்று கத்தினான். அடுத்த நிமிஷமே எல்லோரும் காரைச் சூழ்ந்துகொண்டு அந்தப் புது 'இன்ஸ்பெக்ட'ருக்கு விலங்கு போட்டார்கள். கட்டப்பட்டுக் கிடந்த உண்மை இன்ஸ்பெக்டரைக் குகையிலிருந்து விடுதலை செய்தார்கள்.

விடுபட்ட இன்ஸ்பெக்டர் ரங்கசாமி நாயுடுவைப் பார்த்து, "கண்ணிருந்தும் எங்களையெல்லாம் செங்கோடன் ஏமாற்றி விட்டானே! நீ மட்டும் எப்படி அவனைக் கண்டு பிடித்தாய்?" என்று கேட்டார்.

ரங்கசாமி நாயுடு தன்னடக்கத்துடன், "குரலிலிருந்து தெரிந்து கொண்டேனுங்க" என்றான் சுருக்கமாக.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 153. நடந்ததைச் சொல்!

மூக்கு அறுபட்டு அலங்கோலமாய் வந்த சூர்ப்பனகையைப் பார்த்த அரக்க வீரர்களுக்குத் திகைப்பும் கோபமும் ஏற்பட்டது. அரக்கப் பெண்களோ அழுது புலம்பிச் சூர்ப்பனகையின் காலில் போய் விழுந்தார்கள். பிறகு அவளைக் கைத்தாங்கலாய் நடத்திக் கொண்டு போனார்கள்.

இதை எல்லாம் மற்ற ஜனங்கள் பார்த்தார்கள். என்றும் இல்லாத பயம் உண்டாகி விட்டது அவர்களுக்கு.

சந்தம்

தான னன தன்ன னன
  தன்ன னன தன் ன.

என்றி சைய வன் துயர்
  இலங்கை நகர் எய் த;
நின்ற வர்இ ருந்த வரொ(டு)
  ஓடும் நெறி தே ட;—
குன்றின் அடி வந்து படி
  கொண்டல் என, மன் னன்
பொன்தி ணிபொ லன்க ழல்
  விழுந்த னள்பு ரண் டாள்.

[என்று இசைய வன் துயர்: மேலே சொன்னபடி ஆற்ற முடியாத துயரில்: இலங்கை நகர் எய்த: இலங்கை நகர் அழுந்திக் கிடக்க: நின்றவர் இருந்தவரொடு: நின்றவர்கள் உட்கார்ந்திருந்தவர்களை எழச் சொல்லி அவர்களோடுமே: ஓடும் நெறி தேட: ஓடி விட வேண்டும் என்று வழியைத் தேட—என்ன தண்டனைக்கு ஆளாவோமோ என்று பயந்தவர்களாய்: குன்றின் அடி வந்து படி கொண்டல் என: மலை அடிவாரத்தில் வந்து படியும் கருமேகம் போல: மன்னன் பொன் திணி பொலன் கழல்: ராவணனுடைய பொன் மயமான பருத்த கழல் அணிந்த பாதத்தில்: விழுந்தனள் புரண்டாள்: விழுந்து புரண்டாள்—சூர்ப்பனகை.]

சூர்ப்பனகையின் கோரத்தைப் பார்த்தானோ இல்லையோ, மனசு தாங்க முடியவில்லை ராவணனுக்கு. ஒரேயடியாய் ஆங்காரம் பிறக்கிறது.

ஒவ்வொரு வாயிலும் புகை புறப்பட்டு வருகிறது. சுவாசம் வருந்தோறும் அக்னி மயமாகத்தான் வருகிறது. பற்களைக் கடிக்கிற கடியில் மின்னல்கள் தெறித்து விழுவதுபோல் தீப்பொறிகள் விழுகின்றன.

மடித்த பில வாய்கள் தொறும்
  வந்து புகை முந் தத்,
துடித்த தொடர் மீசை கள்
  சுருக்கொ ளஉ யிர்ப் பக்,
கடித்த கதிர் வாள்எ யிறு
  மின்க ஞல, மே கத்(து)
இடித்த உரும் ஒத்(து)உ ரறி,
  'யாவர் செயல்?' என் றான்.

[மடித்த பில வாய்கள் தொறும்: உதடுகள் மடித்த வாய்களிலிருந்து: வந்து புகை

---

## சொல்லக் கூடாது!



சாப்பிடுகிறவர் :—இன்னிக்குக் காப்பி ஒண்ணுங் கிளாஸ்..........!

சர்வர் :—உஸ் ......... இரையாதீர்கள்; புரொப்ரைட்டர் காதில் விழுந்தால் எனக்கு வேலை போய்விடும்!

ழுந்த : புகை முன்னுக வர : துடித்த தோடர் மீசைகள் : படபட வென்று துடித்துக் கொண்டிருந்த மீசைகள் ; கறுக்கொள உயிர்ப்ப: பெருமூச்சின் உஷ்ணத்தால் கருங்கிக் கறுக்கொள்ள ; கடித்த கதிர் வாள் எயிறு : தெறு தெறு என்று கடித்த பிரகாசம் கொண்ட பெரிய பற்கள் : மின் கஞல : மின்னல்களைப் போல் நெருப்பொறிகளை வீச ; மேகத்து இடித்த உரும் ஒத்து உராறி : மேகத் தில் இடித்த இடியை ஒத்து அலறி : யாவர் செயல் என்றான் : இப்படி உன்னைச் செய்தது யார் என்று கேட்டான்.]

சூர்ப்பனகை பதில் சொல்லுகிருள் : "காட்டில் வந்து இருந்து கொண்டு தங்கள் ராஜ்யத்தை ஆளுகிருர்கள் ; அழகில் மன்மதனையே ஒத்தவர்கள். வானத்திலானுலும் சரி, பாதாளத்தி லானுலும் சரி, ஊனும் உடம்பும் உடையவர்களாயுள்ள யாரும் அவர் களுக்கு ஒப்பாக மாட்டார்கள். ஆனுலும் அவர்கள் மனிதர்கள்தான்."

'காளி டைஅ டைந்து புளி
காவல் புரி கின் ருர் ;
மீனு டைநெ டுங்கொ டியி-
னேன்அ னையர் ; மேல் கீழ்
ஊனு டைஉ டம்பு டைமை-
யோர்,உ வமை ஒவ் வா
மானு டர்த டிந்த னர்கள்
வான்உ ருவி' என் ருன்.

[மீனுடை நெடுங்கொடியினேன் அனையர் : மீனக்கொடி ஏந்திய மன்மதன் போன்ற வர்கள் ; மேல் கீழ் : வானுலக மானுலும் சரி, பாதாள மானுலும் சரி ; ஊனுடை உடம்பு உடைமையோர் : ஊன் கொண்ட உடம்பைப் படைத்தவர்கள் யாரும் ; உவமை ஒவ்வா மானுடர் : ஒப்பாகாத மானுடர் ; தடிந்தனர்: அங்கனம் செய்தார்கள் ; வாள் உருவி : வாளையே உருவிக் கொண்டு : — என்ன துணிவு !]

"ஆகா, மானிடரா செய்தார்கள் இதை!" என்று ஓரே ஆங்காரத்தோடு சிரித்தான் ராவணன். "அவர்கள் வேலை எவ்வளவு கேவலமாக இருக்கிறது! சூர்ப்பனகையே, என்ன வார்த்தை சொல்லுகிருய்? ஏதோ நடவாத காரி யத்தைச் சொல்லுகிருய். பயத்தை ஒழித்துவிட்டு உள்ளதைச் சொல்."

செய்த னர்கள் மானு டர்
எனத்,தி சைஅ னைத் தும்

# பொல்லாத நாய்க்குட்டி!



பெரியவர் :—இந்தப் புது நாய்க்குட்டி யாலே பெரிய உபத்திரவமா யிருக்குங்க! என்னைக் கண்டபடி வெல்லாம் இழுத்து இழுத்துப் பிராணனை வாங்கி விடுகிறதுங்க!

எய்த நகை வந்த(து), எரி
சிந்தி ன,கண் எல் லாம் ;
'நொய்(து)அ வர்வ லித்தொ ழில்,
நுவன்ற மொழி என் றே!
பொய்த விர்,ப யத்தை ஒழி.
புக்க புகல்' என் ருன்.

[செய்தனர்கள் மானுடர் என : 'இப்படிச் செய்தது மானுடர்களா, பேஷ் பேஷ்!' என்று சொல்லி : திசை அனைத்தும் எய்த நகை வந்தது : கோபச் சிரிப்பாகக் கடகட என்று சிரித்தான். அது நாலா பக்கமும் எட்டிய வண்ணமாய்க் கேட்டது ; எரி சிந்தின கண் எல்லாம் : கண்களிலிருந்து நெருப்புப் பொறி பறந்தன ; நொய்து அவர் வலித் தொழில் : அவர்கள் செய்துள்ள அந்தக் கொடுந் தொழில் ரொம்பக் கேவலமானது ; நுவன்ற மொழி என்றே : நீ சொல்லுகிற வார்த்தை விஷயமற்றதாய் இருக்கிறதே! பொய் தவிர் பயத்தை ஒழி : பயத்தினுல்தான் இந்த மாதிரி இல்லாத காரியத்தைச் சொல்லுகிருய்; இந்தக் காரியத்தைச் செய்ய மனுஷனுவது ஒன்றுவது ! புக்க புகல் என்றான் : நடந்ததை அப்படியே சொல் என்றான்.]

ராவணனது மனசு சாம்ராஜ்ய தோரணையிலேயே இருந்தது. அதனுல் சூர்ப்பனகை சொன்ன வார்த்தைகளை நம்ப முடியவில்லை. "பொய் சொல் லாமல் நடந்ததை உள்ளபடி சொல்லு" என்று எரிச்சலோடு சொல்லுகிருன்.



## கர்ப்பச் சேதத்துக்குப்

பிறகும், பிரஸவத்துக்குப் பிறகும், நீடித்த ஜுரங்களுக்குப் பிறகும் தலைமயிர் அதிகமாகக் கொட்டுவதுண்டு. சாதாரண ஜுரங்களுக்குப் பிறகும் மயிர் உதிர்வதுண்டு. அதிர்ச்சி ஸஹிதமான ஜுரமானலும் மயிர் அபரிமிதமாகக் கொட்டும். சில சமயம் விடாமல் உதிர்ந்து கொண்டேயிருக்கும். எந்தக் காரணத்தால் மயிர் உதிர்ந்தபோதிலும், கேசவர்த்தினியைக் கொண்டு மயிர் உதிர்வதை நிறுத்துங்கள்.

உதிர்ந்த கூந்தலுக்குப் பதில் இளம் புதுக் கூந்தலைப் பெறுங்கள். கேசவர்த்தினியின் உதவியால் அற்ப கேசத்தை அபரிமித கேசமாக்குங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

**விலை அணு 12.**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

போலிகளை வாங்கி மோசம் போகாதீர்கள்
"கேசவர்த்தினி. தென்னிந்திய ரஸாயனசாலை" என்ற பெயர்களைக் கவனித்து வாங்குங்கள்.

தயாரிப்பவர்:

**தென் இந்திய ரஸாயனசாலை,**
**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்**

## வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




வெள்ளரிக்காய், இஞ்சி, பாவக்காய், கீரைத்தண்டு, வாழைத் தண்டு, கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு — சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது — முதலியவை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஞாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர் உடற்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு சைஸ்களில் கிடைக்கும்.

●

தயாரிப்பவர்கள்:

# டி. எஸ். ஆர். & கோ.,

வாஸனை திரவிய வியாபாரிகள்
கும்பகோணம்

மதராஸ் ஏஜண்டுகள்:

மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

கோயமுத்தூருக்கும் பாலக்காட்டுக்கும்
ஸோல் ஏஜண்டு:

B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்



ஆசிரியர்: விச்வம்பரநாத் கௌசிக்
மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## 13

சம்பாவதி உடனே நந்தராமைக் கூப்பிட்டனுப்பி, "என் நந்தராம், நீ ஜஸ்ஸோவையும் அழைத்துக்கொண்டு போகப் போகிறாயா?" என்று கேட்டாள்.

"அழைத்துக் கொண்டு போகாமல் என்ன செய்கிறது?"

"நீ அழைத்துக் கொண்டு போவது எனக்குப் பிடிக்கவில்லை."

"என்ன செய்வது அம்மா! எனக்கே இந்த வீட்டை விட்டுப் போக மனமில்லை. ஆனால், கடவுள் எண்ணப்படிதானே நடக்கும், அம்மா!"

"ஜஸ்ஸோவை இங்கேயே விட்டுவிட்டு நீ மட்டும் கிராமத்துக்குப் போ. கொஞ்ச நாள் கழித்ததும் நீ மறுபடியும் இங்கே திரும்பி வந்து விடேன்!"

"அதெப்படி யம்மா முடியும்?"

"எல்லாம் முடியும், நந்து!"

"நான் போகவேண்டுமென்ற ஆசையுடனா போகிறேன்? அப்பாவும் அம்மாவும் விடாப்பிடியாய் இழுத்துக்கொண்டு போக வந்திருக்கிறார்கள். பெரிய ஐயாவும் சின்ன ஐயாவும் 'போ' என்று சொல்கிறார்கள். அப்படியிருக்கும்பொழுது, நான் என்ன செய்வது அம்மா? சொல்லேன்!"

"நீ போ; ஆனால், ஜஸ்ஸோவை விட்டு விட்டுப் போ!—என்ன?" என்று கேட்டாள் சம்பாவதி.

சம்பாவதியும் நந்தராமும் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டுக்கொண்டிருந்த சம்பாவதியின் தாயார் அங்கே வந்து, சம்பாவதியிடம் "என்னடி பேசிக்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள்.

"நந்தராம் ஜஸ்ஸோவையும் அழைத்துக்கொண்டு போகப் போகிறாராம்" என்றாள் சம்பாவதி.

"அழைத்துக் கொண்டு போகாமல் இங்கேயே விட்டுவிட்டுப் போவார்களா? அப்பா - அம்மா இருக்கிற இடத்துக்குத் தானே குழந்தைகளும் போக வேண்டும்!"

"இங்கேயே இருந்தால் என்ன, அம்மா?"

"இங்கேயே எப்படி இருக்க முடியும்?... நீ வேண்டுமானால் அவர்களுடன் போ!"

"நான் எதற்குப் போகவேண்டும்?"

"அவள் எதற்கு இங்கே இருக்க வேண்டும்?"

"அவளுக்கும் ஊருக்குப் போகவே பிடிக்கவில்லை, அம்மா!"

"பிடிக்கவில்லையா? அது உனக்கு எப்படித் தெரியும்?"

"அவள் முகத்தைப் பார்த்தாலே தெரியவில்லையா! அம்மா! ஊருக்குப் போக வேண்டும் என்று சொன்னதிலிருந்தே அவள் ரொம்ப வருத்தமாகக் காணப்படுகிறாள். அதோடு மட்டுமல்ல; என்னிடம் சொல்லவும் சொன்னாள்."

"தப்படியா! அவள் ரொம்ப நல்ல பெண். அவள் உன்னோடேயே இருக்க வேண்டும் என்று எனக்கும்தான் ஆசையாயிருக்கிறது. ஆனால், அப்பா அம்மாவிடமிருந்து பிரித்து வைத்துக்கொள்வது சரியில்லை. அவர்களுக்கும் மனம் கேட்காது. அதனால்தான் நான் சொன்னேன்" என்று கூறினாள் சம்பாவதியின் தாயார்.

நந்தராம், "அம்மா, எனக்கு ஒரு ஆட்சேபமுமில்லை. அவள் உங்கள் பெண்தான். உங்கள் உதவியினால்தான் அவளுடைய வாழ்வே திருந்தியது. அவள் எவ்வளவோ கற்றுக்கொண்டாள். இனி எங்கிருந்தாலும் கஷ்டப்பட மாட்டாள். இங்கேயே இருந்தால் இன்னும் நன்றாகப் படிக்கக் கற்றுக் கொள்வதோடு, தையல் வேலையும் கற்றுக்

கொண்டு விடுவாள். இன்னும் எவ்வளவோ கெட்டிக்காரியாகி விடுவாள். பட்டிக்காட்டில் இதெல்லாம் முடியுமா? சாப்பிட வேண்டியது, தூங்க வேண்டியது — இவ்வளவுதானே! அங்கே போனால் இங்கே கற்றுக்கொண்டதையும் மறந்துவிடுவாள். இங்கிருப்பதில் எனக்கு ஒருவிதமான ஆட்சேபணையுமில்லை. ஆனால், என் அம்மாவும் அப்பாவும் ஒத்துக்கொள்ள வேண்டுமே! நான் என்ன செய்வது? நான் அவர்களுக்கு அளித்த கஷ்டத்தை நினைத்தால், அவர்களிடம் பேசவே எனக்குத் துணிவு வரமாட்டேன் என்கிறது! நீங்கள் சொல்லிப் பாருங்கள், அவர்கள் சம்மதித்தால் எனக்குப் பூர்ணசம்மதமே!" என்றான்.

"உன்னை அவர்கள் கேட்டால்?" என்றாள் சம்பாவதி.

"நான் 'இங்கேயே இருக்கட்டுமே!' என்று சொல்லி விடுகிறேன்" என்றான் சுந்தரம்.

"அவனுடைய தாத்தாவும் பாட்டியும் ஒத்துக் கொள்வார்கள் என்று எனக்கு நம்பிக்கை இல்லை. எவ்வளவு காலம் கழித்துப் பிள்ளையையும் பேத்தியையும் அவர்கள் பார்த்திருக்கிறார்கள்! அவர்கள் மனம் எவ்வளவு கஷ்டப் பட்டிருக்கும்? பாட்டி தன் கதையை எனக்கு ஆதியோடந்தமாகச் சொன்னாள்! எனக்கே ரொம்ப மனசுக்குக் கஷ்டமா யிருந்தது. அப்படி யிருக்கும் பொழுது பெண்ணைப் பிரிக்க எனக்கு இஷ்டமில்லை. ஜஸ்லோ சற்று வெளியே போனாலும், 'குழந்தை! இங்கே வா' என்று கூப்பிட்டுப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு விடவே மாட்டேன் என்கிறாளே பாட்டி! இங்கே விட்டு விட்டுப் போ என்றால் அவள் மனம் கேட்குமா? — சம்பா; உன்னை விட்டுப் பிரிந்திருக்க எங்களுக்குத்தான் மனம் வருமா? எல்லாம் அது போலத்தானே! கல்யாணம் ஆனபிறகு புக்ககத்துக்கு அனுப்புவது என்பது வேறு விஷயம்!" என்றாள் சம்பாவதியின் தாயார்.

"நீங்கள் சொல்வது வாஸ்தவம்தான்! நான் இதை என் வீட்டைப் போலவே பாவிக்கிறேன். எனக்கு எவ்விதமான ஆட்சேபமும் இல்லை" என்றான் சுந்தரம்.

"இது உன் வீடுதான். எப்பொழுது உனக்கு இஷ்டமோ அப்போது வந்து ஒரு மாதம் இரண்டு மாதம் தங்கி யிரு. எங்களை மறந்து விடாதே!"

"அம்மா, உண்மையில் இதுதான் எனக்குச் சொந்த வீடுபோலத் தோன்றுகிறது. எனக்கு உலகத்தில் எவ்வித உதவியும் இல்லாமல் இருந்தபொழுது, இந்த வீட்டில் தான் எனக்கு இடம் கிடைத்தது. இந்த வீட்டை என்னால் மறக்க முடியாது."

"கடவுள் புண்ணியத்திலே உனக்கு ஒரு குறைவும் இல்லை. ஊருக்குப் போய் சுகமா யிரு. ஜஸ்லோவுக்குக் கல்யாணம் செய். அவள் குழந்தை குட்டிகளைக் கண்டு ஆனந்தமாக இரு. உனக்குத்தான் என்ன, அவ்வளவு வயதாகிவிட்டதா? இன்னுமொரு கல்யாணம் செய்துகொள். வம்சத்தை நடத்த கடவுள் கிருபையினாலே குழந்தை பிறந்தாலும் பிறக்கும்."

"நான் கல்யாணம் செய்து கொள்ளவா அம்மா! கல்யாணம் செய்து கொள்வதா யிருந்தால், இப்படித் தெருத் தெருவாகப் பிச்சை வாங்கவேண்டி யிருந்திராதே!— எனக்கு ஒரே ஒரு ஆசை. நல்ல இடத்தில் ஜஸ்லோவுக்குக் கல்யாணம் ஆகவேண்டும். அவள் குழந்தைப் பருவத்திலே ரொம்பக் கஷ்டப்பட்டு விட்டாள். இனிமேலாவது சுகமா யிருக்க வேண்டும். என் பைத்தியக் காரத்தனத்தினாலே நானும் கஷ்டப் பட்டேன், குழந்தையையும் கஷ்டத்திற் குள்ளாக்கினேன். மழையிலும், குளிரிலும், வெய்யிலிலும் கட்டிக் கொள்ளத் துணி யில்லாமல், உண்ண உணவில்லாமல் குழந்தை பட்ட கஷ்டத்தை நினைத் தாலே ......"

சம்பாவதியின் தாயார், "போதுமே அப்பா. உன் துன்பக் கதையை என்னால் கேட்கவே முடியவில்லை" என்று காதில் கையை வைத்துக் கொண்டாள்.

"அம்மா! இந்தக் கஷ்ட நிலைமையி லிருந்து அவளை நீங்கள்தான் காப்பாற்றி னீர்கள். அப்படியிருக்கும்பொழுது, அவள் உங்கள் வீட்டில் இருக்கக் கூடாது என்று சொல்லுவேனா? என்னைப் பொறுத்த வரையில் எவ்வித ஆட்சேபணையும் இல்லை. அப்பா அம்மாளை மாத்திரம் ஒரு வார்த்தை கேட்டு விடுங்கள்" என்று சொல்லிவிட்டு சுந்தரம் போய்விட்டான்.

சம்பா சிறிது வருத்தத்துடன் யசோதாவின் அருகில் சென்று, "உன்னுடைய தாத்தாவும் பாட்டியும் ஒத்துக் கொண்டால் உன் அப்பாவுக்கு எவ்வித ஆட்சேபணையுமில்லையாம். நீ உன் பாட்டியிடம் சொல்லேன்" என்றாள்.

யசோதா பெருமூச்செறிந்து கொண்டே "நான் எப்படிச் சொல்ல முடியும்? எனக்காக உயிரைவிடக் கூடத்

தயாரா யிருக்கும் அவர்களிடம் நான் எப்படிச் சொல்லுவது?" என்றான்.

"அப்படியானால் நான் சொல்லட்டுமா?"

"சொல்லேன்."

* * *

சம்பா, யசோதாவிட மிருந்து நேரே ஜமீன்தாரிணி அம்மாளிடம் போய்ச் சேர்ந்தாள். "என் பாட்டி, நாளைக்கு ஊருக்குப் போகப் போகிறீர்களாமே?" என்று கேட்டாள்.

"ஆமாம், அம்மா!"

"இன்னும் கொஞ்ச நாள் இருந்து விட்டுப் போகக் கூடாதா?"

"இருக்கலாம்; ஆனால் வீடு பூட்டிக் கிடக்கிறது, பார்!"

"ஜல்லோவை இங்கேயே விட்டுவிட்டுப் போங்களேன், பாட்டி!"

"அதெப்படி முடியும், அம்மா!"

"எனக்கு அவள் இல்லாமல் பொழுதே போகாது போலிருக்கிறது, பாட்டி! என்னிடம் அவள் உயிராயிருக்கிறாள்!"

"அது சரிதான் அம்மா! இருந்தாலும், அவள் ஒருத்திதானே எங்களுக்கு ஒத்தாசைக்கு இருக்கிறாள். கந்தாமுக்கு இரண்டு மூன்று குழந்தைகளிருந்தால் பாதகமில்லை; விட்டுவிட்டுப் போகலாம். இவள் ஒருத்திதானே இருக்கிறாள், இவள் தானே வீட்டுக்கு லக்ஷ்மி!"

"உங்களுக்கு ஆசையாயிருக்கும் பொழுதெல்லாம் இங்கே வந்து பார்த்துவிட்டுப் போங்களேன்!"

"அதெப்படி யம்மா முடியும்!" என்று சிரித்தவாறு கேட்டாள் ஜமீந்தாரிணி அம்மாள்.

"முடியாமல் என்ன, பாட்டி?"

"நான் சொல்வதைக் கேள். எங்கள் பின்னாலே நீயும் வந்துவிடு. அங்கே இரண்டொரு மாதம் இருந்துவிட்டு, பிறகு அவளுடைய அப்பாவிடமும் தாத்தாவிடமும் சொல்லிவிட்டு நீ அவளை அழைத்துக் கொண்டு வா! எனக்கு ஆட்சேபணையில்லை."

"அவளுடைய தாத்தா சம்மதிக்காவிட்டால்?"

"நீ மட்டும் திரும்பி வந்துவிடு."

"அப்படியானால் நான் வந்து என்ன பிரயோசனம்?"

"எங்கள் காட்டுப்புறத்தைப் பார்த்தாற் போலாயிற்று!"



"நாட்டுப்புறத்திலே என்ன வைத்திருக்கிறது? பட்டணத்திலேதான் பொழுது போகும்!"

"ஒரு தடவை வந்து பாரேன்! நான் உங்கள் அம்மாவிடம் சொல்லட்டுமா?"

"நல்ல பாட்டி அம்மா நீங்கள்!—நான் ஜலஜாவை இங்கே விட்டுவிட்டுப் போங்கள் என்கிறேன்; நீங்களோ, என்னை அங்கே வந்துவிடச் சொல்கிறீர்களே!" என்று சிரித்தவாறு கூறினாள் சம்பாவதி.

"நீ வருவாயா, அம்மா? எங்களுக்கு அந்த பாக்கியம் எங்கே கிடைக்கப் போகிறது!" என்றாள் ஜமீன்தாரிணி அம்மாள்.

* * *

சம்பாவதி நம்பிக்கை இழந்துவிட்டாள். ஜலஜாவை நிறுத்தி வைப்பது ரொம்ப ரொம்ப சிரமமான காரியம் என்று அவளுக்குப் பட்டது. "என் வார்த்தையை யாரும் கேட்கமாட்டேன் என்கிறார்கள். நீ போய்த்தான் தீரவேண்டும் போலிருக்கிறது, ஜலஜா!" என்று கூறிவிட்டு, அவள் நேரே ராமநாத பாபுவின் அறையை அடைந்தாள்.

"அண்ணா! நந்தராம் சம்மதித்துவிட்டான். ஆனால் அந்தக் கிழப்பாட்டி இருக்கிறாளே, அவள்தான் சம்மதிக்கமாட்டேன் என்கிறாள்!" என்றாள் சம்பாவதி.

## அவன் அதிர்ஷ்டம்!



"என்ன சொல்கிறாள், அவள்?" என்றார் ராமநாதபாபு.

"ஜலஜாவை இங்கே விட்டுவிட்டுப் போகமாட்டேன் என்று அவள் சொல்லவில்லை. ஆனால் என்னவெல்லாமோ சாக்குப் போக்குச் சொல்லுகிறாள். நீதான் எங்களோடு வந்துவிடேன் என்கிறாள் ஒருதரம்; இன்னொருதரம் தாத்தா சம்மதிக்க மாட்டார் என்கிறாள்!"

"உன்னையும் கூப்பிடுகிறாளா?"

"ஆமாம், அண்ணா! ஜலஜா இல்லாமல் பொழுது போகாது என்றேன். நீயும் எங்களோடு வந்துவிடு என்கிறாள்!"

"நான்தான் முன்பே சொன்னேனே, அவளுடைய தாத்தாவும் பாட்டியும் அவளை இங்கே விட்டுவிட்டுப் போகமாட்டார்கள் என்று. பிறத்தியார் வீட்டிலே யாராவது பெண்ணை விட்டுவிட்டுப் போவார்களா?" என்று கூறிவிட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார் ராமநாதபாபு.

## 14

இரவு மணி எட்டு அடித்தது. நந்தராமும் யசோதாராவும் மூட்டை கட்டுவதில் ஈடுபட்டிருந்தனர். யசோதாராவின் வதனம் பார்வைக்கு அமைதி நிலவியதாகவும் கம்பீரமாகவும் காணப்பட்டதேயன்றி, அவளுடைய உள்ளம் ஒருவிதக் கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்தது. அதற்கு அறிகுறியாகச் சிறிது நேரத்திற்கு ஒருதரம் அவளது உள்ளத்திலிருந்து நீண்ட பெருமூச்சு எழுந்தது. "துணிமணிகளை மட்டும் எடுத்துக் கொண்டு, மற்ற சாமான்களை யாருக்காவது கொடுத்து விட்டால் என்ன?" என்று கேட்டான் நந்தராம்.

"கொடுப்பானேன்! இந்த அறையிலேயே போட்டுப் பூட்டி வைத்திருந்தால் போச்சு!" என்றாள் யசோதாரா.

"பூட்டி வைப்பானேன்?"

"இங்கேயே திரும்பி வரும்படியாகி விட்டால்?"

"அப்படியெல்லாம் ஒன்றும் ஆகாது."

"ஒரு வேளை உனக்கும் தாத்தாவுக்கும் ஒத்துக் கொள்ளா விட்டால் எங்கே போவது?"

"நான் சண்டை போட்டால்தானே ஒத்துக்கொள்ளாமல் போகும்? என்னல் முடிந்த வரையில் அவர்களைத் திருப்தியுடன் வைத்துக் கொள்ளுவேன். சண்டைக்கே இடம் கொடுக்க மாட்டேன். அப்படிச் சண்டை வந்துவிட்டால் நான் மட்டும் எங்கேயாவது ஓடுவேனே தவிர, உன்னை அங்கேயேதான் விட்டுவிட்டுப் போவேன்!"

"அதெல்லாம் எப்படி முடியும்? நீ போகிற இடத்திற்கெல்லாம் நானும் வரத்தான் வருவேன். உன்னை விடவே மாட்டேன். நீ என்னை விட்டு விட்டுப் போகக் கூடாது."

"என்ன, குழந்தை மாதிரிப் பேசுகிறாயே! நான் எங்கே யிருந்தால் உனக்கு என்ன? நீ அங்கேயேதான் இருக்க வேண்டும்."

"எனக்கு அங்கே போவதற்கே பிடிக்கவில்லை. நீ போகிறாயே என்பதற்காகத்தான் நானும் வருகிறேன். நீ இருக்கிற இடத்தில்தான் நானும் இருப்பேன், அப்பா!"

"அசடே, வாழ்க்கை முழுவதும் என்னோடேயே இருந்துவிட முடியும் என்று நினைக்கிறாயா?" என்று அன்பு ததும்பும் பார்வையுடன் யசோதாராவைப் பார்த்துக் கேட்டான் சுந்தராம்.

"என் அப்பா, எனக்கு உன்னைத் தவிர வேறு வேண்டியவர்கள் யார் இருக்கிறார்கள்?"

யசோதாராவின் கண்கள் நீரைக் கக்கின. இதயத்தின் அடக்கிக் கிடந்த துயரம் கண்ணீராக மாறி வெளிவர முயன்றது. "அப்பா, சம்பாவை விட்டுப் பிரிய எனக்கு மனமே வரவில்லை!" என்றாள்.

"எப்படியம்மா மனம் வரும்? அவன் உன்னைத் தன் உயிருக்குயிராய் வைத்திருக்கிறான். உன்னை இங்கேயே வைத்துக் கொள்ள வேண்டுமென்று ரொம்ப ரொம்ப ஆசைப்படுகிறான். ஆனால், உன் தாத்தாவும் பாட்டியும் சம்மதிக்கவேண்டாமா, அம்மா?"

யசோதாரா ஒன்றும் பதில் பேசாமல் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

"எனக்கே இந்த வீட்டை விடுவது என்றால் வருத்தமாகத்தானிருக்கிறது.

# நியாயம்தான்!



வேலைக்காரி:—இதிலே மூன்று படி கல்லும் ஒரு படி அரிசியும் இருக்குதுங்க. கல்லைப் பொறுக்கி எடுக்க மூன்று அணா கூலி கொடுங்க!

எஜமானி:—ஒரு அணா வாங்கிக் கொண்டு அரிசியை மட்டும் பொறுக்கிக் கொடுத்து விடு! —எஸ். [illegible]

ஆனால், என்ன செய்வது?" என்றான் சுந்தராம்.

"அப்பா, இதைவிட முன்போலவே நாம் பிச்சைக்காரர்களாகவே இருந்திருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்குமே என்று தோன்றுகிறது!"

"நீதானே அம்மா, 'வேலை பார், வேலை பார்' என்று என்னை வற்புறுத்தினாய். இல்லாவிட்டால் நான் எதற்காக வேலை பார்த்திருக்கப் போகிறேன்?"

"இந்த வீட்டையும் விட்டுப் போக வேண்டி வரும் என்று எனக்கு அப்பொழுதே தெரிந்திருந்தால் இந்த வேலை பார்க்கச் சொல்லியிருக்கவே மாட்டேன்!"

"என்ன இருந்தாலும், நாம் போகப் போவது நம் சொந்த வீடு, அம்மா! எவ்வளவுதான் இங்கே சுகமாயிருந்தாலும், இது பிறத்தியார் வீடுதானே? இந்த வீட்டை விட்டுப் போவது என்றால் உனக்கு இப்பொழுது வருத்தமாகத்தானிருக்கும். போய்க் கொஞ்ச நாளாகிவிட்டால், தானாக எல்லாம் சரியாகப் போய்விடும்!"

"எல்லாம் சரியாகப் போவதாவது! என் உயிர் இந்த வீட்டில் இருக்கும் பொழுது, இதை நான் எப்படி அப்பா மறக்க முடியும்?"

"அம்மா, உனக்கு அங்கே எல்லாவிதமான சுகமும் கிட்டும். கடவுள் கிருபை இருந்தால் அடுத்த வருஷத்திற்குள் உனக்குக் கல்யாணம் ஆகிவிடும். கல்யாணம் ஆனதும் நீ எங்கேயிருந்தாலும் புக்ககத்திற்

ருப் போகவேண்டியவள்தானே!" என்று கூறிக்கொண்டே போனான் சுந்தரம்.

"அப்பா, நான் பிறந்தவுடனேயே இறந்திருந்தால்?" என்று தழதழத்த குரலில் ஆரம்பித்தாள் யசோதரா.

"என்ன அம்மா, இது? இப்படி அசட்டுப் பிசட்டு என்று எண்ணுகிறாயே! உனக்கு என்ன வருத்தம்? ஏன் இப்படிப் பேசுகிறாய்?"

யசோதரா ஒன்றும் பதில் அளிக்கவில்லை. சுந்தரம் அவளது முதுகைக் கையினால் வருடியவாறு, "அம்மா, குழந்தாய்! ஏன் இப்படி வருத்தப்படுகிறாய்? உனக்கு என்ன அம்மா, கஷ்டம்? ஏதாவது கஷ்டமிருந்தால் என்னிடம் மறைக்காமல் சொல்லு, அம்மா! இந்த உலகத்திலே உன்னைத் தவிர வேறு யார் எனக்கு இருக்கிறார்கள்? நீ வருத்தப்படுவதைக் கண்டு, என் மனதுக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. சொல்லம்மா, முடிந்தால் உன் வருத்தத்தைப் போக்கப் பார்க்கிறேன்."

தலை குனிந்தவாறு இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த யசோதராவின் கண்களிலிருந்து கண்ணீர் கீழே சொட்ட ஆரம்பித்தது.

"ஏன் அம்மா, என்னிடம்கூடச் சொல்ல மாட்டேன் என்கிறாய்? என்னிடம் கூடவா சொல்லக்கூடாது?" என்று மறுபடியும் கேட்டான் சுந்தரம்.

யசோதரா தன்னுடைய தந்தையின் தோள்களில் தன் தலையைச் சாய்த்துக் கொண்டு விம்மி விம்மி அழலானாள்.

"என்னிடம் கூடவா சொல்லக் கூடாது?" என்று மேலும் கேட்டுக் கொண்டே இருந்தான் சுந்தரம்.

(தொடரும்)

★ ★ ★

# செல்லாத எட்டணா

*சுபஸ்ரீ*

செனட் ஹாலில் ஒட்டப்பட்டிருந்த 'இண்டர் ரிஸல்ட்'டைப் பார்த்த ரங்கசாமி அப்படியே மூர்ச்சித்து விழுந்து விடவில்லை! அந்த வருஷமும் நிச்சயம் 'கோட்' என்பதுதான் முன்பே அவனுக்குத் தெரிந்த விஷயமாயிற்றே! அப்பொழுது அவன் செய்ய எண்ணியதெல்லாம், கட்டாயம் பையன் பாஸாகி விடுவான் என்று எதிர்பார்த்திருந்த அப்பாவின் அடிக்குத் தப்புவது எப்படி என்பதுதான்!

அதற்கும் வெகு சீக்கிரத்திலேயே அவனுக்கு ஒரு யோசனை தோன்றிவிட்டது. அருகிலிருந்த ரிக்ஷாக்காரனிடம், "டேய், மூத்து முதலித் தெருவுக்கு எவ்வளவு வேணும்?" என்றான்.

"நாலணா கொடுங்க, சாமி!"

"இந்தா பாரு, நான் சொல்றபடி நடந்தால் உனக்கு எட்டணா தருகிறேன். தூரத்திலிருந்தே எங்கள் வீட்டைக் காண்பிப்பேன். எங்கப்பா கிட்ட நீ 'இவரு பரீட்சையிலே பெயிலாப் போனதைக் கேட்டு மூர்ச்சை போட்டுட்டாரு. நாலைஞ்சு பையங்க என்னைக் கூப்பிட்டு இந்த நம்பர் வீட்டிலே கொண்டு விடச் சொன்னாங்க!' என்று சொல்லணும். என்ன? இந்தா எட்டணா!" என்று எடுத்துக் கொடுத்தான்.

மலர்ந்த முகத்துடன் அந்த எட்டணாவை வாங்கி, ரிக்ஷாக்காரன் அவசர அவசரமாக மடியில் செருகிக் கொண்டான்.

ரிக்ஷாக்காரனிடம் விஷயத்தை அறிந்த ரங்குவின் தகப்பனார் அலறிப் புடைத்துக் கொண்டு அவனைப் படுக்கையில் கிடத்தி ஆஸ்வாசப் படுத்தினார். அவரது சகதர்மிணி ஒரேயடியாக ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டாள். இந்த அமர்க்களத்தில், ரிக்ஷாக்காரன் அவரிடமும் காசு வாங்கிக் கொண்டு சென்றான்.

சென்றவன், சிறிது நேரத்திற்கெல்லாம் மீண்டும் திரும்பி வந்து, "சாமி, இந்த எட்டணா செல்லாதுங்களே! 'டீ'க் கடைக்காரன் வாங்கிக்க மாட்டேங்கிறானுங்க!" என்றான்.

"நான் எங்கேடா 'முழு எட்டணா' தந்தேன்? ரெண்டு நாலணான்னு கொடுத்தேன்!" என்றார் கோபமாக, ரங்குவின் தகப்பனார்.

"நீங்க இல்லீங்க; இன்ன எஜமான்தான் ஏமாத்திப்புட்டாரு. மயக்கம் போட்டு விழுந்தேன்னு எங்கப்பாகிட்ட சொல்லு, எட்டணா தாரேன்னு சொல்லிப்புட்டு, கடையிலே செல்லாத எட்டணாவைக் கொடுத்துப்பிட்டாரு!"

அவ்வளவுதான்: ரங்குவின் தகப்பனார் பிரளயகால ருத்ரனைப்போல் கோபத்துடன் ரங்கசாமியை அடிக்கத் திரும்பினார்.

அதுவரை படுக்கையில் படுத்துக் கொண்டிருந்து அவரது அடிகளை வாங்கிக் கொள்ள அவன் அவ்வளவு அசடா, என்ன?

# கல்யாணப் பரிசு

கமலா

அமரநாதன் அப்பொழுதுதான் சாப்பிட்டு விட்டுக் கைகளை அலம்பிக் கொண்டு, "ஆனந்த மானந்தமே!" என்று மெல்லிய குரலில் பாடிக் கொண்டே வாசலுக்கு வந்தான். தபால்காரனின் குரல் கேட்டது. தன்னுடைய நண்பர்கள் யாராவது எழுதியிருப்பார்கள் என்று நினைத்து ஆவலுடன் கடிதத்தை வாங்கினான். கையெழுத்தைப் பார்த்ததும் அவனால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. அது அவனுடைய ரேவதி எழுதிய கடிதம்:

அன்புள்ள அத்தான்!

நான் எழுதிய கடிதங்களுக்கெல்லாம் பதில் எழுதுவதற்கு, பாவம், தங்களுக்கு ஓய்வு ஒழிச்சல் இல்லையா? அல்லது உங்கள் ரேவதியை மறந்தே போய்விட்டீர்களா? உங்களுடைய இருதயம் இத்தனை சீக்கிரத்தில் கல்லாக மாறிவிடும் என்று நான் கனவிலும் எதிர்பார்க்க வில்லையே! கடந்த நாட்களில் செய்த வாக்குறுதிகளைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள் — என்ன நினைவில்லையா? இல்லை யென்றால் சரி; ஆண்களுக்கு இது சர்வ சாதாரணமான விஷயம். ஆனால், நீங்கள் மறந்து விட்டாலும் நான் மறக்க முடியுமா?

சென்ற வருடம் பரீக்ஷை முடிந்ததும், அப்பா தங்களை இங்கு வந்து ஒரு வாரம் தங்கிவிட்டுப் போகும்படி எழுதியதற்கு, உடனே புறப்பட்டு வந்தீர்கள். அன்று அம்மாவின் சொற்படி, நான் காப்பி போட்டுக்கொண்டு வந்து உங்களுக்குக் கொடுத்தேன். நீங்கள் காப்பியை வாங்கிக் கொண்டே என்ன சொன்னீர்கள் என்பது நினைவிருக்கிறதா?......

"ரேவதி! காப்பி எவ்வளவு நன்றாய்ப் போட்டிருக்கிறாய்? இனி நான் இருக்கும் வரையில் நீதான் காப்பி போட்டுக் கொடுக்க வேண்டும்" என்று சொல்லி என்னைப் பார்த்தீர்களே, ஒரு பார்வை — குறும்புத் தனமும் குஷியுமாக! அதை மறந்துவிட வேண்டு மென்று எவ்வளவோ முயன்றும் முடியவில்லையே, அத்தான்!

பிறந்த நாள் பரிசாக அன்று நீங்கள் அன்புடன் அளித்த புடவையை உடுத்திக் கொண்டு நான் கண்ணாடியின் முன்னால் நின்று அழகு பார்த்துக்கொண்டிருந்த போது, பின்புறமாக வந்து என் பின்னலில் ஒரு ரோஜா மலரைச் சூட்டி என்னை வம்புக்கிழுத்தீர்களே, அந்த நாளைக் கூடவா மறந்து விட்டீர்கள்?

அம்மா வேண்டா மென்று வைதும், அங்கு அவமதிப்பாய்ப் பார்த்தும், சட்டை செய்யாமல் உங்களுடன் சினிமாவுக்கு வந்து அருகில் வெட்கத்துடன் உட்கார்ந்தால்......

"வெட்க மென்ன, வெட்கம்! இன்றோ நாளையோ நாம் இருவரும் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறவர்கள் தானே?" என்று கூறி, விஷமத்துடன் சிரித்தீர்களே, அதுகூட ஞாபகமில்லையா?

அத்தான்! நீங்கள் ஊருக்குப் போகும் அன்று உங்களுக்கு விருந்து வைத்த போது, நீங்களும் நானும் சேர்ந்து சாப்பிட்டோ மல்லவா? அப்போது அம்மா, "நம் ரேவதியும் அமரனும், பார்வதி பரமசிவன்போ லிருக்கின்றனர்!" என்று அப்பாவிடம் சொன்னதற்கு, "அவர்கள் பணக்காரர்கள்; நாமோ ஏழைகள். நம் வீட்டில் அவர்கள் பெண் கொள்வார்களா?" என்று அப்பா சொன்னாரல்லவா? அப்போது நீங்கள் என்ன சொன்னீர்கள்? "அன்பிற்கும், ஐச்வரியத்திற்கும் சம்பந்தமில்லை, மாமா!" என்று சொல்லி, என்னைப் பார்த்து அர்த்த புஷ்டியுடன் நகைக்க வில்லையா?

நீங்கள் ஊருக்குப் புறப்பட்டுச் செல்லும் போது, "அத்தான்! என்னை மறந்து விடுவாயா? எப்படி யிருந்தாலும் என்னை மறக்காமல்..." என்று நான் பரிதாபமாய்த் தங்களை வேண்டிக் கொண்டபோது, "ரேவதி! நான் எப்பேர்ப்பட்டவனென்று இன்னும் நீ அறிந்து கொள்ளவில்லை. என் உடல்தான் அங்கு இருக்கும்; உயிர்




இங்குதான் இருக்கும்!'' என்று சொல்லி, எனக்கு ஆறுதலளித்த வார்த்தை இன்று ஏன் உங்கள் நினைவுக்கு வரவில்லை?

அத்தான்! இத்துடன் எத்தனையோ கடிதங்கள் தங்களுக்கு எழுதி விட்டேன். 'பெண்ணைக் கொடுக்கிறேன்' என்று உங்கள் வீட்டுக்கு வலுவில் வந்த என் அப்பாவிடம், 'உங்கள் யோக்கியதைக்கு மேற்பட்ட விஷயங்களில் தலையிடாதீர்கள்!' என்று உங்கள் அப்பா சொல்லி அனுப்பி விட்டார். அந்த விஷயத்தையும் தங்களுக்கு உடனே எழுதினேன். அதற்கும் பதில் எழுதாமல் இருந்து விட்டீர்கள். என்மேல் தப்பு ஏதாவது இருந்தால் மன்னித்து விடுங்கள், அத்தான்!

நீங்கள் ஆண்பிள்ளை; எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் 'சிவனே!' என்று இருக்கலாம். நானோ பெண். மனித சமூகம் என்னைச் சதா கண்காணித்த வண்ணமிருக்கும்!

கடைசியில் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் எழுதி முடித்து விடுகிறேன். என் அப்பா சில நாட்களுக்கு முன்பு தன் சக்திக்கு ஏற்ற ஒரு வரனை எனக்காக நிச்சயித்தார். நான் அவரை விவாகம் செய்து கொள்ள மறுத்தேன். மூட்டுத் தைரியத்துடன் தங்களை நம்பி அவரை எதிர்த்துப் பேசினேன். வாதம் வலுத்ததே தவிர ஜயம் கிட்டவில்லை. அதை விட என்னால் செய்யக் கூடும்?— நீங்கள்தான் சொல்லுங்களேன், அத்தான்!

உங்கள் அப்பாவின் பேராசையை அடக்குவதற்குத் தங்களுக்குச் சக்தியில்லையா? பார்க்கப்போனால் எனக்கு இருக்கும் தைரியம்கூடத் தங்களுக்கு இல்லைபோலிருக்கிறதே! நீங்கள் இத்தனை பயங்கொள்ளி என்று எனக்கு முன்பே தெரிந்திருந்தால், என் மனதை என்றோ மாற்றிக் கொண்டிருப்பேனே?

அத்தான்! என் வேதனையை—துக்கத்தை—பொறுக்க முடியாமல் எழுதி விட்டேன். என்னை மன்னிக்க மாட்டீர்களா? மன்னித்தாலும் மன்னிக்கா விட்டாலும் உங்கள் ரேவதியை இன்றைய தினத்திலிருந்து அடியோடு மறந்து விடுங்கள்!

இப்படிக்கு,

ரேவதி.

அமரநாதன் கடிதத்தைப் படித்து முடிப்பதற்கும், அவனுடைய நண்பனான மூர்த்தி அங்கு வருவதற்கும் சரியாயிருந்தது.

"அமர்! தவறாமல் என் கல்யாணத்திற்கு நீ வரணும்டா!" என்று சொல்லிக் கொண்டே, திருமண அழைப்புப் பத்திரிகையை அவனிடம் கொடுத்துவிட்டுச் சென்றான் மூர்த்தி.

என்ன விந்தை இது! அந்தக் கல்யாணப் பத்திரிகையில் கண்டிருந்த மணமகன் மூர்த்திதான்; மணமகள்...?

ரேவதி! ஆமாம்; ரேவதியேதான்!

அதைப் பார்த்ததும் அமரநாதனின் கண்களில் இரண்டு சொட்டு நீர் துளித்தது. அவன், தன் ரேவதிக்கு அளித்த 'கல்யாணப் பரிசு' அந்த இரண்டு சொட்டுக் கண்ணீர்தானா?

# அருமையான பற்கள் !



## உங்கள் பற்கள் எத்தனை நாட்கள் புன்னகையை அழகுபடுத்தும் ?




ஒருவர் உள்ளத்தைக் கவர உங்கள் வசீகரப் புன்னகை மிகவும் எளிதானவழி என்பதை அறிவீர்களல்லவா. ஆகையால், உங்கள் பற்களை ஈறு வியாதிகள் பாழ்படுத்தாமல் காப்பாற்றிக் கொள்ளுங்கள். தினமும் தவறாமல் சுகமளிக்கும் எஸ். ஆர். டூத்பேஸ்ட்*னால் பற்களை சுத்தம் செய்தால் அவை உறுதியான ஈறுகளில் அப்பழுக்கற்ற வெண்மையுடன் விளங்குகின்றன.

*பல் வைத்தியர்கள் ஈறு வியாதிகளுக்கு கைகண்ட மருந்தெனக் கருதும் சோடியம் ரிசினோலியேட் சேர்ந்தது.

GSR. 26-50 TM

D. & W. GIBBS LIMITED, LONDON, ENGLAND







குழந்தைகள் பராமரிப்பைப்பற்றிய புதிய புத்தகம் 4 அணாவுக்கு ஸ்டாம்புகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். உங்கள் பெயரையும் விலாசத்தையும் எச். ஜே. பாஸ்டர் & கோ. லிட்., த. பெ. 202, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.




Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

# ஜலதோஷத்தினால் வேலை பாதிக்கப்பட்டதா?

30 விநாடியில் நிவாரணம் அடையுங்கள்





ஜலதோஷத்தினால் கஷ்டமும் இடைஞ்சலும் அடையாதீர்கள். கர்ஸோட்ரைன் மூலம் உடனே சிகிச்சை பெறுங்கள். படத்தில் காட்டியுள்ளதுபோல் குழாய் நுனியை ஒவ்வொரு நாசித் துவாரத்திலும் வைத்து இரண்டு தடவை சுவாசத்தை உள்ளிழுங்கள். பல மூலிகைகள் சேர்ந்த கர்ஸோட்ரைன் ஆவி ரூபமாக உள்ளே சென்று மூக்கினுள் வீங்கிய மெல்லிய தோலை சுருங்கச் செய்து சளியையும் காயச் செய்கிறது. கஷ்டத்துக்குக் காரணமான மூல இடத்தையே கர்ஸோட்ரைன் தாக்குவதால் நிச்சய நிவாரணம் அளிக்க சாத்தியமாகிறது. ஜலதோஷம், கபம், குளிர்ஜுரம், தலைபாரம் முதலியவைகளுக்கு முற்றிலும் சிபார்சு செய்யப்படுவது. எல்லா கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்.

## கர்ஸோட்ரைன்

பையிலும் பாக்கெட்டிலும் எளிதாகக் கொண்டுபோகக் கூடிய இந்த வசதியான குழாய்.




இங்கிலாந்தில்
E கிரிப்பித் ஹ்யூஜெஸ்
லிமிடெட்டாரால் தயாரிக்கப்பட்டது

K. S. D. 2

# ஆரோக்யம், பலம் - ஜீவ சக்தியின் ரகசியம்



பலஹீனமாய், மெலிந்து குன்றிப் போனவர்களுக்கு

அதிக வேலை செய்யும் போது, கவலையும், ஆயாசமும், உங்கள் தேகத்திலுள்ள ஜீவாதார தாதுப் பொருள்களை இழக்கச் செய்வதினால், நீங்கள் குன்றி பலஹீனமடைந்து, மந்தமடைகிறீர்கள். அப்படி இழந்த தாதுக்களைத் திரும்பச் சேர்த்து ஆரோக்ய பத்ததிக்குப் போஷாக்கு அளித்தால் புது பலத்திற்கும், ஆரோக்யத்திற்கும் வழியைக் காண்கிறீர்கள். டானிக் ஆகாரமான விக்கல்ப் — சரியான ரீதியில் அளவிடப்பட்டு 9 தாது உப்புக்களையும் அயோடின் ஆகாரத்தையும் அளிக்கிறது. இவ்வித மூலப்பொருள்கள் தேக ஆரோக்ய பத்ததியில் ஐக்யமாகும் போதே வளருகிறீர்கள். ஆயாசம் நீங்கி வீர்யம் ஏற்படும். மந்தம் மறைகிறது. பலஹீனம் பலமாக மாறுகிறது. புது ஆரோக்யம் கண்டு பிரகாசிக்கிறீர்கள். இன்றே விக்கல்ப் சாப்பிடுங்கள்.

A Tonic and a FOOD combined!

டானிக்கும் ஆகாரமும் சேர்ந்தது

**VIKELP** MINERAL TABLETS

விக்கல்ப் தாது பில்லைகள்

AD. NO. 5432

Regd. No. M. 4392




மதராஸ் ஸ்டி. ஏஜண்ட்ஸ்: சக்தி டிரேடிங் கம்பெனி
581, பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, மதராஸ்